## வானதி பதிப்பகத்துக்கு வெள்ளிவிழா



# வச்ச மரம் தோப்பாகும்!

**நீதிபதி மு. மு. இஸ்மாயில் கூறுகிறார்:**

**வானதி என்ற சொல்லை தரமான நூல்களை வெளியிடும் பதிப்பகத்தின் மறுபெயர் என்று எல்லோரும் சொல்லும் அளவுக்குத் தம் வெளியீடுகளின் தரத்தில் கவனம் செலுத்துகிறவர்.**

**இளம் வயதில் அவர் பட்ட துன்பங்கள், அவற்றுக்கிடையே எதிர்நீச்சல் போட்டுத் தான் எடுத்துக்கொண்ட குறிக்கோளில் அவர் கண்டிருக்கும் வெற்றி — ஆகியவை இளைஞர்களுக்கு முன் மாதிரியாக அமையும்.**

---

- தேவகோட்டைக்காரரான திருநாவுக்கரசு பர்மாவுக்குச் சென்றபோது ஏழு வயது. செல்வச் செழிப்பில் திளைத்த இளம் பருவம். இங்கே ஆற்று மணலில் விளையாடுகிறமாதிரி நெல் மணிகளில் நகரத்தார் வீட்டுப் பிள்ளைகள் சறுக்கி விளையாடிய வளப்பம்.

- பர்மாவில் ஜப்பான் குண்டு வீசித் தாக்கிய போது, உடைமைகளை அப்படியப்படியே போட்டுவிட்டு ஒரு மாத காலம் கால் நடையாகவே கல்கத்தாவுக்கு அகதியாகத் திரும்பினார்.

- ரங்கூனில் விட்ட படிப்பை மீண்டும் தொடர்ந்தது தேவகோட்டையில். எஸ். எஸ். எல். சி. வரை உடன் பயின்ற நண்பர் திரு. தமிழ்வாணன்.

- அறுபது ரூபாய் சம்பளத்தில் 1946ல், சின்ன அண்ணாமலையின் தமிழ்ப் பண்ணையில் குமாஸ்தா வேலை. சம்பளத்தை விட, கல்கி, ராஜாஜி, நாமக்கல் கவிஞர், ம. பொ. சி. போன்ற அறிஞர்களுடன் பழகும் வாய்ப்புக் கிடைத்ததை 'போனஸ்' என்று குறிப்பிடுவார்.

- அடுத்த வருஷமே இராம. சடகோபன் நடத்திய 'தியாகி' பத்திரிகையில் வேலை. சிறுகதைகள் எழுதத் தொடங்கியது இங்கே தான்.

- மாம்பலத்தில் பதினெட்டு ரூபாய் வாடகையில் அறை ஒன்றில் தமிழ்வாணனுடன் வாசம். 'அணில்' சிறுவர் இதழில் உதவி ஆசிரியராக வேலை. தமிழ்வாணனும் இவரும் இரவு முழுவதும் டீயும் பன்னும் சாப்பிட்டு விட்டுச் சின்னச் சின்னக் கதைகளை எழுதி நாலணா விலையில் அச்சிட்டு விற்ற காலம்.

- ஆளுக்கு முந்நூறு ரூபாய் முதல் போட்டு 'ஜில்ஜில்' பதிப்பகம் தொடக்கம். வெண்ணிலா, மிட்டாய், கோமாளி, ஜில்ஜில் பத்திரிகைகள் வெளியிடப்பட்டன. லாபகரமாய் நடைபெறவில்லை. சொந்தத்தில் வாங்கியிருந்த அச்சகத்தையும் விற்று விட்டார்.

- மனம் தளர்ந்துபோய் ஹோட்டல் கூட நடத்தியதுண்டு. அதிலும் தோல்வி.

- ஆனந்த விகடன் தீபாவளி மலர் ஒன்றில் இவர் பார்த்த யானைத் தலை ஒன்றே வானதி பதிப்பகச் சின்னம் உருவாக்கத் தூண்டியது.

- அமரர் கல்கியின் மீதுள்ள ஈடுபாடு காரணமாய்த் தன் மகளுக்கு வானதி என்று பெயரிட்டு அதையே பதிப்பகத்துக்குச் சூட்டினார். வானதி என்றால் ''வான்-நதி'' ஆகாயகங்கை என்கிற பொருளும் இவருக்குக் கைகொடுத்தது.

**திருமதி சிவசங்கரி கூறுகிறார் :**

Behind every successful man, there is a woman — என்பது செட்டியார் விஷயத்தில் நிஜம். ஆதி நாட்களிலும், ஏன் இன்றும் கூட, ஆச்சி அவருக்குக் கொடுக்கும் முழு ஆதரவு, உற்சாகம் பற்றித் திருநாவுக்கரசு அவர்கள் குறிப்பிடும் போதெல்லாம் அவர் முகம் பெருமையில் ஜொலிப்பதை நான் பலமுறைகள் பார்த்திருக்கிறேன். செட்டியார் கொடுத்து வைத்தவர்தான்.

---

- வெள்ளி விழா காண்கிற வானதி பதிப்பகம் இதுவரை வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கை 1008.

- வானதி திருநாவுக்கரசு தொடர்பு கொள்ளும் நிகழ்ச்சிகளில் ஒரு நாட்டுப் பாடலை அவரே பாடுவார்.

''வாழை பயிராகும்
வச்ச மரம் தோப்பாகும்
இஞ்சி பயிராகும்
எலுமிச்சை தோப்பாகும்''

என்று அடுக்கிக் கொண்டே போவார். ஆகி வந்த கரங்கள் பட்டால் புஞ்சை நிலத்தில் கூட என்னென்னவோ 'தோப்பாக' வளருமாம். செட்டிநாட்டுப் பகுதியின் நாட்டுப் பாடல் இது.

- சொந்தத்தில் வைத்துள்ள அம்பாஸடர் கார்.... ஓட்டுவதும் இவரே.

- ''எனக்குள் சத்தியச் சக்கரம் சுழன்று கொண்டே இருக்கிறது. நான் யாரையாவது ஏமாற்ற நினைத்தால் அந்தச் சக்கரம் திசை மாறிச் சுழன்று எனக்கு எதிராகிவிடும்'' என்று சொல்கிற மனப் பக்குவம் இவரிடம் உண்டு.

- தெருவில் நடக்கும்போது ஆணி, பிளேடு போன்ற எதையேனும் கண்டால், கூச்சப் படாமல், அதை எடுத்து ஒதுக்குப்புறமாய்ப் போடுகிற மனிதர் இவர்.

- அதிகமான பதிப்புக்களில் வானதிக்கு நூல் எழுதிய ஆசிரியர்கள் வரிசைப்படி சாண்டில்யன், கண்ணதாசன், வாரியார் சுவாமிகள்.

- மிக அதிகமான பதிப்புக்கள் வெளி வந்தது கண்ணதாசனின் 'அர்த்தமுள்ள இந்து மதம்' பதினைந்து பதிப்புக்கள்.

- வானதி வெள்ளி விழா வெளியீடாக வரவிருக்கும் நூல் தெய்வத்தின் குரல் (மூன்றாம் பாகம்).

- சினிமாப் பார்க்கும் பழக்கம் வெகு அபூர்வம். நூற்றுக் கணக்கான நாட்கள் ஓடிய ஒரு படத்தை 'நீங்கள் பார்க்கவில்லையா?' என்று கேட்டால் ஏதாவது படம் போவார்.

- வானதி பதிப்பகத்தில் புத்தகங்கள் வெளி வந்த அந்த ஆண்டுக்குள்ளேயே 'ராயல்டி' கணக்குகள் தீர்க்கப்பட்டு விடுகின்றன.

---

**திரு சாண்டில்யன் சொல்கிறார் :**

வானதி திருநாவுக்கரசு எனது ஒரே பப்ளிஷர். ஏதோ ஒரிரு புத்தகங்களை நான் வெளியில் கொடுத்திருந்த போதிலும், சில கட்டாயங்களின் பேரில் அவற்றைக் கொடுத்து, அவற்றைத் திரும்பவும் இவரிடமே சேர்த்துவிட்டேன். இதற்கெல்லாம் முக்கிய காரணம் அவருடைய நாணயம் தான். அப்பழுக்கில்லாத ஆபீஸ் கணக்கு. என்னிடம் அவர் எப்போதும் காட்டிவரும் மரியாதை அன்பு இவைதான்.

-யெஸ்பால்

புகைப்படங்கள்: உத்ரா

---

## அட்டை விலையும் உயர்கிறது!

உணவுவிநியோக அட்டைகளைப் பங்களா வாசிகளுக்குக் கொண்டு வந்து கொடுக்கும் அரசு ஊழியர்கள், ''இரண்டு ரூபாய் தர வேண்டும்; அதற்கு மேல் எவ்வளவு வேண்டுமானாலும் தரலாம்'' என்கின்றனர். குறைந்த பட்சம் ஒரு ரூபாய் 'டிப்' கிடைக்கிறது.

குடிசை வாழ் ஏழைகளிடம் செல்கையில், ''அட்டை விலை மூன்று ரூபாய்'' என்கின்றனர் ஊழியர்கள். ''இரண்டு ரூபாய்தானே அரசு நிர்ணயித்த விலை?'' என்றால், ''எங்களுக்குக் கிடைப்பது அட்டைக்கு ஆறு காசு தானே, அது எப்படி போதும்?'' என்று பதில் கேள்வி பிறக்கிறது. அட்டை பெறுவது அத்தியாவசியமானதால் பாவம், ஏழைகள் கெஞ்சி, பேரம் பேசி அரையோ முக்காலோ கொடுத்துப் பெற்றுக் கொள்கின்றனர்.

வேறு சில இடங்களில் வட்டச் செயலாளர்களின் வம்பு!

எத்தனையோ கோடிக் கணக்கில் பட்ஜெட் போட்டு, அதில் எத்தனையோ லட்சங்கள் விரயமாவதையும் பார்த்துக்கொண்டிருக்கும் தமிழக அரசு, போயும் போயும் உணவு விநியோக அட்டைக்கு விலை நிர்ணயித்துப் பரவலான பட்டப் பகல் லஞ்ச ஊழலுக்கு இடமளித்திருக்கவும் வேண்டாம்; ஏழை எளியோரின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்டிருக்கவும் வேண்டாம்!

புதிய
# கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்




குழந்தைகளுடைய பற்களின் மென்மையான எனமல் எளிதில் துவாரங்களுக்கும் சிதைவுக்கும் உள்ளாகிறது. பெரியவர்களுக்கும் பற்சிதைவுக்கு எதிராக பாதுகாப்பு தேவை.

புதிய ஃப்ளோரிகார்ட் டூத் பேஸ்ட் பல் துவாரங்களுக்கும், பற்சிதைவுக்கும் எதிராக உங்கள் குடும்பத்தினருக்கு நிச்சயமான பாதுகாப்பைத் தருகிறது. துவாரங்களையும், பற்சிதைவையும் உண்டாக்கும் வாய் அமிலங்களுக்கு எதிராகப் பற்களை உறுதிப்படுத்துவதற்கென பல் எனாமலுடன் இணைந்து செயல்படும் விசேஷ கோல்கேட் எம்எஃப்பி ஃப்ளோரைட் அதில் உள்ளது.

கோல்கேட் ஃப்ளோரிகார்ட் புன்னகைக்கும் புதுச்சுவை கொண்டது. உங்கள் குடும்பத்திற்கு இன்றே வாங்குவீர்.




உலகெங்கும் உள்ள ஆராய்ச்சிசாலைகளில் சோதிக்கப்பட்டுள்ள எம்எஃப்பி ஃப்ளோரைட் துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராகப் பற்களை உறுதிப்படுத்துகிறது என்பது மருத்துவ ரீதியாக நிரூபணமாகியுள்ளது. கோல்கேட்டின் தீவிர ஆராய்ச்சி மட்டுமே இந்த தனிப்பட்ட எம்எஃப்பி ஃபார்முலாவை உங்களுக்கு வழங்க முடியும்.






**ஃப்ளோரிகார்டில் உள்ள எம்**
**எஃப்பி ஃப்ளோரைட் எனமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.**

தமிழ்நாடு, கேரள மாநிலங்களிலும், கர்நாடகத்தில் குறிப்பிட்ட சில மார்க்கெட்டுகளிலும் இப்போது கிடைக்கும்.

CFT.G.3 TM

# நீங்கள் கேட்டவை

# தராசு










✖ கே.எம். பாலிகா ✖ இளையராஜா ✖ மாஸ்டர் குமார் ✖ ஜெயகாந்தன் ✖ நக்கீரன் ✖ ருபிக்ஸ் க்யூப்

✖ சுவாமிநாதன், மருதூர்

? ஒரு மனிதனின் ஆசை எப்போது மடிகிறது?

! ''எனது முதல் ஆசை ஹாக்கிதான்; எனது ஒரே ஆசை ஹாக்கிதான்'' என்ற காப்டன் சுர்ஜித்சிங், மனம் நொந்து, இந்திய ஹாக்கி அணியிலிருந்து வெளியேறும் போது அவர் ஆசை நிராசையாகி மடிந்து விட்டதென்றுதான் அர்த்தம். அதைக் கொன்றது இந்தியஹாக்கி ஃபெடரேஷன். ஆட்டக்காரர்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய தொகைகளை வெளி நாடுகளுக்குச் சென்றபோது கொடுக்காமல் ஏமாற்றியது மட்டுமல்ல; ஹாக்கி வீரர்களை உற்சாகப்படுத்துவதற்குப் பதில் ஃபெடரேஷன் நிர்வாகிகள் அவர்களை ஏகவதையே காரியமாகக் கொண்டார்கள். ஓர் அதிகாரி பத்து நிமிஷ ஒத்திகைக்குப் பிறகு சுர்ஜித் சிங்கை அழைத்து, ''ஒழுங்காக ஆடுவதானால் ஆடு. இல்லையேல் ராஜினுமா செய்! நன்கொடை திரட்டித் தருகிறோம்'' என்றாராம்!

✖ ஏ. எம். பழனிச்சாமி, கோவை

? நேர்மை எப்படிப் பட்டவர்களிடம் வாழ்ந்து கொண்டிருக்கிறது?

! தமிழ்நாடு மின்வாரியப் பிரதம இன்ஜினியர் பாலிகா போன்றவர்களிடம். 9—5—82 இதழ் நீங்கள் கேட்டவை பகுதியில் பல்புகள் அடிக்கடி ஃபியூஸ் ஆவது பற்றித் தராசு எழுதியிருந்ததைப் படித்து விட்டு பாலிகா கல்கி ஆசிரியரிடம்ஃபோன் தொடர்புகொண்டு பேசினார்: ''நாங்கள் பணியாற்றுவது பெரிய தொழிலதிபர்களுக்காக மட்டுமல்ல. மின்சாரம் பயன்படுத்துவோரில் எளிய மனிதர்கள்தாம் பெரும்பான்மையினர். அவர்களுக்காகத்தான் முக்கியமாக நாங்கள் இருக்கிறோம். குறைகள் எங்கள் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டால் நிவர்த்தி செய்யக் காத்திருக்கிறோம்'' என்றார்! பொறுப்புணர்ச்சியைக் கண்டு வியக்கிறோம் நாம்.

✖ ஆர். ஸ்ரீனிவாசன், ஸ்ரீரங்கம்

? பிரச்னைகள் விவாதங்களால் தீருமா?

! தீராது. தவறு என்று உணரும்போது ஒரு தரப்பு விட்டுக் கொடுக்கும் மனப் பக்குவம் பெற்றால்தான் பிரச்னை தீரும். இல்லையெனில் படத் தயாரிப்பாளர்களும் சென்ஸார் போர்டு அதிகாரிகளும் போல் தொடர் கதையாக விவாதத்தை நடத்த வேண்டியதுதான்! 'தமிழ்ப் படத்தில் செக்ஸுக்குக் கத்தரிக்கோல் போடும்சென்ஸார் டார்ஜான் படத்தில் நிர்வாணக் காட்சியை அனுமதிப்பானேன்?' என்கிறார் அமைச்சர் வீரப்பன். தூக்கு மேடை படத்தில் தமது பாத யாத்திரைக் காட்சி வெட்டப்படுகிறதே என்று அங்கலாய்க்

கிறார் கருணாநிதி. படங்கள் சென்ஸார் ஆவதில் அனாவசியத் தாமதம் என்று கூக்குரல் எழுப்புகிறது சினிமா தயாரிப்பாளர் சங்கம். சென்ஸார்களோ தாமதமில்லை என்பதற்குப் புள்ளி விவரம் தருகிறார்கள், சென்ஸார் போர்டு அங்கத்தினர்களுக்கு லஞ்சம் தந்து ஆசை காட்டும் அளவுக்குத் தயாரிப்பாளர்கள் துணிந்து விட்டதாகக் குற்றம் சாட்டுகிறார்கள்; நமது படங்களில் செக்ஸ் கொச்சைப்படுத்தப்படுவதால் படு ஆபாசமாகிறது என்றும் வன்முறை மிகைப் படுத்தப்படுவதால் சமுதாயத்துக்கு ஆபத்து என்றும் அதனால் வெட்ட நேர்கிறது என்றும் கூறுகிறார்கள்; 'கருணாநிதியின் பாத யாத்திரையைத் தனியே டாக்குமெண்டரியாகக்காட்டட்டும் தூக்குமேடைபடத்தில் சம்பந்தமில்லாமல் திணிப்பானேன்' என்கிறார்கள். நியாயமாகத்தான் படுகிறது.

✠ எம். ராஜப்பா, சென்னை-81

? நக்கீரன் கருத்து நம் கருத்தல்ல என்கிறார் இதயம் பேசுகிறது ஆசிரியர். முரண்பாடு இல்லையா?

! நிச்சயமாக. ஆசிரியர் குழாத்தைச் சேர்ந்த ஒருவரே எழுதும்போது ஆசிரியர் "நம் கருத்தல்ல" என்று நழுவுவது உலக மகா விநோதம். ' ஒருவேளை நக்கீரன் ஆசிரியர் குழுவைச் சேர்ந்தவரே அல்ல என்று நாம் நம்ப வேண்டும் என்று எதிர் பார்க்கிறார்களோ என்னவோ! தெளிவு படுத்தட்டுமே பொறுப்பாசிரியர்!

✠ எஸ். ராஜகணேஷ், தலைஞாயிறு *

? தற்காலப் பெண் எழுத்தாளர்கள் பற்றி ஜெயகாந்தன் யோசித்து எழுதியிருக்கிறாரே படித்தீர்களா?

! படித்தேன், படித்தேன். பெண் எழுத்தாளர்களோ, ஆண் எழுத்தாளர்களோ எல்லாருமே எந்தப் பத்திரிகைக்கு எழுதுகிறார்களோ அதற்கேற்றவாறு எழுதுகிறார்கள். எனவே எழுத்தாளர்கள் மீது மட்டும் பாய்ந்து பயனில்லை. பத்திரிகை ஆசிரியர்களையும் ஜே. கே. தட்டிக் கேட்க வேண்டும்.

✠ ஆர். அரிகோபி, தரணம்பேட்டை

? தூக்க மாத்திரை சாப்பிடுவது நல்லதா?

! அத்தியாவசியமானதொழிய எந்த மாத்திரையுமே சாப்பிடுவது நல்லதல்ல. இப்போதெல்லாம் மெடிகல் பில்லை ஆபீஸில் தந்து பணம் வாங்கும் வசதி பலபேருக்கு இருப்பதாலேயே நிறைய மருந்து வாங்கிச் சாப்பிடுகிறார்கள். தினம் அரை மணி நேரம் வேகமாக நடந்தால் ஒன்றரை மைல் நடந்ததற்குச் சமானம். களைவுகளற்ற தூக்கம்வரும். உடம்பும் ஆரோக்கியமாய் இருக்கும்.

✠ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி

? தேன் கொட்டிய அனுபவம் உண்டா?

! இல்லை. ஆனால் தேர்தல் பிரசாரத்துக்காக ஹரியானா சென்ற ராஜீவ் காந்தி அம்மாநில அரசின் பொதுஜனத் தொடர்புத் துறையின் நிர்வாக யந்திரத்தை முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டார் என்பதைப் படித்தபோது தேன் கொட்டியது போல்தான் வேதனையாக இருந்தது. அரசுச் செலவில் அபரிமித வரவேற்பு ஏற்பாடுகளுக்காக அஞ்சையாவை அலற அடித்த ராஜீவா இப்படி...? சே! மிகப் பெரிய ஏமாற்றமளித்து விட்டார் எதிர் காலப் பிரதமர்.

✠ எஸ். ரமேஷ், மதுரை-10

? வாழ்க்கையில் முன்னேற எது மிகமிக அவசியம்? ஆர்வம்? திறமை? அதிர்ஷ்டம்?

! மாஸ்டர் குமாரைக் கேட்போமே?

"அதிர்ஷ்டம்: களையான முகத் தோற்றத்துடன் மட்டுமின்றி நடிகை சுமதியின் தம்பியாகவும் பிறந்திருக்கிறேனே!

"திறமை: சங்கிலி பார்த்தீர்களல்லவா? அதிலேயே புரிய வந்திருக்குமே? தவிர மேல் நாட்டு நடனங்கள் அத்துப்படி எனக்கு.

"ஆர்வம்: இல்லாமலா நடித்த படங்களின் எண்ணிக்கை பன்னிரண்டு வயதுக்குள்ளாகவே நூறை நெருங்குகிறது?" மிஸ்டர் ரமேஷ்! மூன்றுமே மிக மிக அவசியமாகத்தான் தோன்றுகிறது!

✠ எம். ஸ்ரீதரன், விருத்தாசலம்

? இளையராஜாவின் கர்நாடக இசை; இளையராஜாவின் மேற்கத்திய இசை - ஒப்பிடுக.

! மேற்கத்தியஇசையில் இளமைத்துடிப்பு + கர்நாடக இசையில் ராஜ கம்பீரம் = இளையராஜா!

✠ டி. எஸ். ரெட்டி, வேலிப்பட்டி

? முடியவே முடியாதது எது?

! ரூபிக்ஸ் க்யூபின் ஆறு பக்கங்களில் முழுசாக ஆறு நிறங்கள் வருமாறு செய்ய முடியவே முடியாது என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஒரு புத்தகம் கிடைத்தது. என் மகன் அதைப் படித்தான். ஒரே மாலையில் வெற்றி கண்டான். இப்போது புத்தகத்தைப் பார்க்காமலேயே ஒரே நிமிடத்தில் போடுகிறான். ஆக, புத்தகத்தைப் பார்த்து ரூபிக்ஸ் க்யூப் போடுவது எளிது; எனவே தேவையில்லாதது. புத்தகத்தைப் பார்க்காமல் போட நினைப்பது கால விரயம்; எனவே தேவையற்றது.

✠ ரூ. 10 பரிசு பெறுபவர்:

எஸ். ராஜகணேஷ், தலைஞாயிறு
(முழு விலாசம் தேவை)


வடக்கே வரும் சுற்றுலாப் பயணிகளைத் தமிழ் நாட்டிற்கும் அனுப்பி வைக்க வேண்டும் என்று ஆர்.எம்.வீ. வற்புறுத்தியுள்ளார்.
யோவ்! அந்த ஆளுங்களை இந்தப் பக்கமும் கொஞ்சம் அனுப்புய்யா!.. சும்மா அங்கிருந்தபடியே திருப்பி அனுப்பிச்சுடாதீங்களே!
மத்திய சுற்றுலா அமைச்சர்


கணக்கு பேப்பர்களைக் கொடுங்க!
இந்துக்கள்
முஸ்லிம்கள்
இத்தனை நாளா என் பேப்பரை நானே திருத்தி மார்க் போட்டுகிட்டு இருந்தேன்!
கிறிஸ்தவர்கள்


விவசாயிகள் போராட்டம்
பே.. பே.. பே..!
மக்கள் நலன்
விவசாயிகள் சங்கம்
நாயுடு

# ‘மினி’ தேர்தல்; ‘மாக்ஸி’ பிரசாரம்!

நடக்கப்போவது ஒரு மினி தேர்தல்தான், நாலே மாநிலங்களில். ஆனால் நாடு தழுவிய பொதுத்தேர்தலோ என்று ஐயமுறும் விதத்தில் தீவிரப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார் இந்திராகாந்தி. 16000 கிலோ மீட்டர் பயணம் செய்து 200 பொதுக் கூட்டங்களில் பேசுகிறார்.



இத்தனைக்கும் எதிர்க்கட்சிகள் ஒன்று படாமல் கலகலத்துப் போயிருக்கின்றன. வாஜ்பாயி ஒருவரைத் தவிர மற்ற எதிர்க்கட்சித் தலைவர்களின் பிரசாரத்தில் சுரத்தில்லை, சூடில்லை.

இருப்பினும் பிரதமர் இந்தப்பாடு படுகிறார்; மகனுக்கும் முழுக்கச் சாவி கொடுத்து முடுக்கி விட்டிருக்கிறார் என்றால் அவர் கவலைப்படுகிறார் என்று அர்த்தம். கவலைக்குக் காரணம் உண்டு.

ஜனதா ஆட்சி குலைந்து, இவரை மீண்டும் அரியாசனத்தில் அமர்த்தியபோது மக்கள் என்னென்னவோ எதிர்பார்த்தார்கள். குறைந்தபட்சம் விலைவாசிகள் ஸ்திரப்பட்டிருந்தால், நாட்டில் அமைதி நிலவியிருந்தால், லஞ்ச ஊழல் குறைந்திருந்தால், வேலை இல்லாத் திண்டாட்டம் பற்றிக் கவனம் செலுத்தப்பட்டிருந்தால் மக்கள் மகிழ்ந்திருப்பார்கள். ஆனால் ஏமாற்றமே மிஞ்சுகிறது.

இதைப் புரிந்து கொண்டிருக்கிறார் இந்திரா. எனவேதான் சூறாவளி சுற்றுப்பயணம். அவரது சுறுசுறுப்பைக் கண்டு வியக்கிறோம். அதே சமயத்தில் சில கேள்விகளும் எழுகின்றன:

• தமது ஆட்சியில் உள்ள குறைகளுக்கு ஜனதா அரசு மீதும், ஆர்.எஸ்.எஸ். மீதும், சி.ஐ.ஏ. மீதும் குழந்தைத்தனமாகப் பழி சுமத்தும் பழக்கத்தை இந்திராகாந்தி என்று விட்டொழிக்கப் போகிறார்?

ஜனதா அரசை ‘கிச்சடி அரசு’ என்று கேலி செய்கிறவர் கேரளத்தில் மட்டும் தமது கட்சி தலைமை தாங்கும் அவியல் அரசு தான் ஸ்திரமான ஆட்சி அளிக்கும் என்று எப்படி கூறுகிறார்?

ஹரியானாவில் தேர்தல் பிரசாரம் செய்யச் சென்ற ராஜீவ் காந்தி அந்த மாநில அரசின் பொது ஜனத்தொடர்புத் துறையின் நிர்வாக இயந்திரத்தை முழுமையாகப் பயன் படுத்திக் கொண்டது நியாயமா?

மேற்கு வங்கத்தில் பொதுக்கூட்டம் நடத்த அனைத்துக் கட்சிகளுக்கும் தடையிருந்த இடத்தில் ராஜீவ் தெரிந்தே தடை உத்தரவை மீறிக் கூட்டம் நடத்திப் பேசியிருக்கலாமா?

‘‘இந்தியா இன்னொரு அணுகுண்டை வெடிக்கலாம்’’ என்று வாஜ்பாயீ கூறியதற்கு ‘‘இதெல்லாம் மக்களின் கவனத்தைத் திசை திருப்புகிற பேச்சு’’ என்று இந்திரா காந்தி பதிலளிப்பது பொருந்துமா? அணுகுண்டு வெடிப்பது பற்றிய இந்திய அரசின் கொள்கையை அறிய மக்களுக்கு உரிமை உண்டல்லவா? அதைத் தெளிவாக்கியதுடன் நிற்க வேண்டியதுதானே! ‘‘முன்பு போக்ரான் பாலைவனத்தில் இந்தியா அணுகுண்டு வெடித்தபோது உலகெங்குமுள்ள அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளின் வாழ்த்துச் செய்திகள் குவிந்தன. ஆனால் இந்திய மக்களோ கண்டு கொள்ளவேயில்லை. தேசியப் பெருமிதமே நம் மக்களிடம் இல்லை’’ என்று இந்திரா குறைப்பட்டுக் கொள்ளலாமா? இந்திய மக்கள் வாழ்த்தவில்லை எனில் அணுகுண்டு வெடித்துப் பரிட்சை செய்வதை அவர்கள் விரும்பவில்லை என்று புரிந்து கொள்ள முடியாதா?

ஜனாதிபதி ஆட்சி முறை பற்றிக் கேட்கப்படும்போதெல்லாம் தெளிவாக உண்டு – இல்லை என்று சொல்லாமல் எதற்காகக் குட்டை குழப்புகிறார் இந்திரா காந்தி? ஒரு சமயம் ‘இல்லை’ என்பதும் இன்னொரு சமயம் பிரான்ஸ், அமெரிக்காவை உதாரணம் காட்டுவது மாக ஊகங்களுக்கு இடமளிப்பானேன்?

தேர்தல் பிரசாரத்தையொட்டி எழும் கேள்விகள் இவை. விடைகளைப் பெற ‘தராசு’வை அணுக வேண்டியதில்லை. நமக்கே தெரியும்தானே!

கல்கி
1982 மே 23
துந்துபி வைகாசி 9
மலர்: 40 இதழ்: 43



# ரவிகுல திலகன்

## செம்பியன்

### 19

அச்சாணி உருவப்பட்டு விட்டதால் சக்கரம் கழன்று தனியே உருண்டு சென்று, அதி வேகத்துடன் சாலை ஓரக் கால்வாயைத் தாவி, ஒரு வரப்பில் குதித்து, வயலில் சுழன்று பின்னர் வேகம் குன்றிப் பக்கவாட்டில் விழ, தேரோ ராஜபாட்டையில் நீண்ட தூரத்துக்குச் சாய்ந்து சரிந்தபடியே குதிரைகளால் இழுத்துச் செல்லப்பட்டது. தேர் நிலை குலைந்த அதிர்ச்சியிலேயே அதிலிருந்தவர்கள் தூக்கி எறியப்பட்டுச் சாலையோரம் கிடந்தார்கள். ரத சாரதி அசைவற்றிருந்தான். அவனுக்கு உயிரே பிரிந்து விட்டதா, மயக்கமடைந்திருந்தானா தெரியவில்லை. பாராசிரயனோ ஒரு காலில் பலத்த அடி பட்டதன் காரணமாக அதை நகர்த்தவும் முடியாமல் வேதனையில் துடித்தபடி ''ஆ! அம்மா! ஐயோ!'' என்று அலறிக் கொண்டிருந்தார். உடன் வந்த நாலு மெய்க் காவலர்களோ இப்படி ஓர் இக்கட்டான நிலையில் இன்னது செய்வது என்ற சமயோசித அறிவு கூட இல்லாது குதிரைகளிலிருந்து இறங்கிப் பாராசிரயனை நெருங்கவே பயந்து கையைப் பிசைந்து கொண்டு நின்றனர்.

ரதம் குடை சாய்ந்து சில பல நொடிகளுக்குள் அராபிய வேடத்திலிருந்த விஜயாலயனும் ஜெயசிங்கனும் அங்கு வந்துவிட்டனர். ஜெயசிங்கன் சரேலென்று குதிரையை விட்டிறங்கி, ''ஐயா! ஐயா! என்ன ஆயிற்று! அடாடா! அடப் பாவமே!'' என்ற போலிப் பரிவுடன் பாராசிரயனை அணுகினான். அராபியனோ முதலில் தேர்ப் பாகனை ஒரு நோட்டம் விட்டு விட்டுப் பிறகு மாதண்ட நாயகரை நெருங்கி ஒரு பார்வையாலேயே நிலவரத்தைப் புரிந்து கொண்டவனாக ஜெயசிங்கனைத் தனியே அழைத்து அராபிய மொழியில் ஏதோ சொன்னான்.

''ஐயா! என் நண்பனுக்கு ஓரளவு மருத்துவம் தெரியும். உமது காலில் எலும்பு முறிவு ஏற்பட்டிருக்கிறது என்கிறான். இவன் தரும் முதலுதவியை ஏற்றுக் கொள்ளுங்கள். பிறகு தஞ்சை திரும்புவோம். அங்கு சிறந்த வைத்தியர்களைக் கொண்டு சிகிச்சை அளிக்கிறேன்'' என்றான் ஜெயசிங்கன்.

''ஏதோ செய்யுங்கள். வலி உயிர் போகிறது'' என்று முனகினார் பாராசிரயன். உடனே ஜெயசிங்கன் உத்தரவு பிறப்பிக்க, சற்று முன்வரை ஆணவத்துடன் இவனை அலட்சியமாய்ப் பார்த்த பாராசிரயனின் வீரர்கள் இப்போது அவனையே தலைவனாக ஏற்றுச் செயல்பட்டார்கள். அவன் கட்டளைக்கிணங்கத் தேரிலிருந்து இரு பட்டைப் பலகைகளை முறித்தெடுத்து அராபியனிடம் தர, அவற்றை அவன் வாள்கொண்டு சரியான அளவுக்குச் செதுக்கி, எலும்பு முறிவு ஏற்பட்டிருந்த காலுக்கு அணைப்பாகத் தந்து, கட்டுப் போட்டான். பின்னர் பாராசிரயனின் 'பயணப் பெட்டியைத் திறந்து அதிலிருந்து பெரிய கனமான விரிப்பு ஒன்றை எடுத்துக் கயிறு கொண்டு இரு முனைகளைப் பிணைத்து இரு குதிரைகளுக்கிடையில் தூளி கட்டினான். பாராசிரயனை மெல்லத் தூக்கித் தூளியில் கிடத்தினார்கள். நண்பர்கள் இருவரும் இரு குதிரைகளில் ஏறிக் கொண்டார்கள்.

''தண்ணீர் தெளித்துத் தேர்ப் பாகனின் மயக்கத்தைத் தெளிவியுங்கள். பிறகு எல்லோரும் தஞ்சைக்கு வந்து சேருங்கள். பதினென் பூமி வணிக நகரத்தார் ஜெயசிங்கன் என்று விசாரித்தால் யாரும் என் மாளிகைக்கு வழி சொல்லுவார்கள்'' என்று காவலரிடம் கூறிய ஜெயசிங்கன், விற்பனைக்குக் கொணர்ந்திருந்த தங்கள் விலையுயர்ந்த குதிரைகளைப் பத்திரமாக அழைத்து வரும் பொறுப்பையும் அவர்களிடம் ஒப்படைத்து விட்டு விஜயாலயனைப் பார்த்தான். இருவரும் ஒரே கணத்தில் குதிரைகளைக் கால்களால் உந்தி ஓடச் செய்தார்கள். ஒரே சீரான வேகத்தில் மாறுதலற்ற இடைவெளி விட்டுக் குதிரைகள் செல்ல, இடையில் தூளியில் படுத்திருந்த பாராசிரயனுக்குக் கொஞ்சம் கூடச் சிரமம் தெரியவில்லை. கால்தான் முறிவு



கண்ட இடத்தில் 'விண் விண்'ணென்று தெறித்ததே ஒழியப் பயணக் கஷ்டம் ஏதுமில்லை. கால் வலி கூட அராபியன் கட்டுப் போட்டதில் சற்றுக் குறைந்துதான் இருந்தது. அவர்களுடைய சமயோசித ஆற்றலை வியந்து போற்றிய பாராசிரயன் ''ஆபத்பாந்தவர்களாக வந்து சேர்ந்தீர்கள்'' என்றார். ''தேர்க் கடையாணி எப்படிக் கழன்றது என்றுதான் புரியவில்லை.''

''கழன்றிராது ஐயா! முறிந்திருக்கும். நீண்ட நாள் உபயோகத்திலிருந்த அதன் ஆயுட்காலம் முடிந்து உடைந்திருக்கும். சாலையில் தேடிப் பார்த்தால் துண்டுகள் அகப்படலாம்'' என்றான் ஜெயசிங்கன். ''கண் மூடி உறங்க முயலுங்கள்.''

தமக்கு மேலாகக் குடை விரித்து நிழல் தந்த மரக் கிளைகள் எதிர்த் திசையில் ஓடிச் செல்வதைப் பார்த்து ரசித்தபடியும் மழை ஓய்ந்து மேகங்கள் கலைய, இடை இடையே சுள்ளென்று உறைத்த வெய்யிலை அனுபவித்தபடியும் குழந்தை போல் தூளியில் படுத்துப் பயணம் செய்தார் பாராசிரயன்.

தஞ்சையிலிருந்து புறப்பட்டு அவர்கள் அதிகதூரம் வந்துவிட்டிருக்கவில்லையாதலால் சீக்கிரமே திரும்பி விட்டார்கள். ஜெயசிங்கன் மாளிகையில் பாராசிரயனுக்கு ராஜோபசாரம் நடந்தது. தஞ்சையின் மிகச் சிறந்த மருத்துவர்கள் அவரைப் பரிசோதித்து எலும்பு முறிவைச் சீராக்கிக் கட்டுப் போட்டார்கள். பத்துப் பதினைந்து நாட்களில் மெல்ல ஊன்று கோலுடன் நடக்கத் தொடங்கலாம் என்று சொன்னார்கள். பாராசிரயன் வயதானவரெனினும் ஆரோக்கிய மானவராதலால் சீக்கிரமே முறிவு முற்றிலும் சரியாகிவிடும் என்று உறுதி அளித்தார்கள். நல்ல வேளை, எலும்பு முறிவு முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடையில்தான் ஆகியிருந்தது. நோயாளிக்கும் சரி, வைத்தியருக்கும் சரி, அதிக சிரமமில்லை.

''உமது பயணத்தை நான் தடுத்து விட்டேன்; வருந்துகிறேன்'' என்றார் பாராசிரயன், அன்று மாலை நலன் விசாரிக்க வந்த ஜெயசிங்கனிடம்.

''பாதகமில்லை ஐயா! நாளைக் காலை புறப்பட்டுக் கொள்கிறோம். நீங்கள் இதை உங்கள் சொந்த இல்லமாகவே பாவித்துப் பத்துப்பதினைந்து நாட்கள் தங்கியிருக்கலாம். உங்களுடைய சகல வசதிகளையும் கவனிக்க இங்கே பணியாளர்கள் உள்ளனர். வைத்தியரும் தினம் இரு முறை வந்து போவார்'' என்றான் ஜெயசிங்கன்.

''என்ன ஆச்சரியம் பாருங்கள்! தாங்கள் தக்க சமயத்தில் வந்ததுமட்டுமல்ல;என் தகுதிக்கேற்ற செல்வந்தரான நண்பராகவும் வந்து சேர்ந்தீர்கள்! இல்லாத போனால்



இத்தனை வசதியும் பராமரிப்பும் உபசரிப்பும் எனக்கு எங்கிருந்து கிட்டும்? மாதண்ட நாயகர் என்ற முறையில் சில சுகபோகங்களை அனுபவித்துப் பழகி விட்டேனில்லையா? அவை இல்லாவிட்டால் சிரமம்தான்.''

''எது வேண்டுமானாலும் கட்டளை இடுங்கள்; உடனே நிறைவேறும்'' என்ற ஜெயசிங்கன், பணிப் பெண்ணிடமிருந்து குடுவையைத் தானே வாங்கி பாராசிரயனுக்கு மதுக் கிண்ணத்தை நிரப்பித் தந்தான். அராபியன் தனது கோப்பையை நிரப்ப வேண்டாமெனக் கைநீட்டி கூடவே அவனுக்குப் பழரசம் கொண்டு வரச் சொல்லிவிட்டுத் தன் கோப்பையை நிரப்பிக் கொண்டான்.

சிரித்தார் பாராசிரயன். ''விஜயாலயன் கூட இப்படித்தான்; மது அருந்தவே மாட்டான்!'' என்று கூறித் தொண்டையை நனைத்தார்.

''அப்படியா! அந்த அளவுக்கு மனக் கட்டுப்பாடு உள்ளவரா சோழ இளவரசர்!'' என்று ஆச்சரியப்பட்டான் ஜெயசிங்கன்.

இடையிடையே அராபிய மொழியில் தனக்குத் தெரிந்த அளவில் சில கருத்துக்களை மொழிபெயர்த்து நண்பனுக்குக் கூறுவான் ஜெயசிங்கன். அவன் பதில்களையும் புரிந்து கொண்ட மட்டில் பாராசிரயனுக்குத் தமிழில் தெரிவிப்பான். அராபியனும் சில தமிழ்ச் சொற்களைத் தட்டுத் தடுமாறிப் பேசுவான். இப்படி நாடகமாடியபடியே உரையாடலைத் தொடர்ந்தனர் நண்பர்கள்.

''எந்த ஒரு மனிதனும் பூரண நல்லொழுக்கம் உடையவனாய் இருக்க முடியாது; விஜயாலயன் மதுவைத் தொடா விட்டாலும் வேறு ஏதாவது பலவீனமுடையவனாகத்தான் இருப்பான் என்று என் நண்பன் கூறுகிறான்'' என்றான் ஜெயசிங்கன்.

இதற்குள் கோப்பையில் பாதிக்கு மேல் குறைத்துவிட்டிருந்த மதுவைப் பணிப்பெண் இட்டு நிரப்புவதைத் தடை செய்யாத பாராசிரயன் சொன்னார்: ''ஆமாம், உங்கள் நண்பர் கூறுவது ரொம்ப சரி. விஜயாலயனுக்குப் போதை ஏற்ற மதுவே தேவையில்லை. அழகிய மங்கையரைக் கண்டாலே போதும்.. அவனுக்குத் தலை கிறுகிறுக்க ஆரம்பித்து விடும்!''

மதுவை மேலும் ஒரு மிடறு விழுங்கிய பின் அட்டகாசமாகச் சிரித்தபடியே அவர் தொடர்ந்தார்: ''உங்களுக்குத் தெரியுமா? அவனை முத்தரையரின் குடும்பத்தைச் சேர்ந்த பேரழகி உத்தமசீலி நிராகரித்து விட்டாள். இருந்தாலும் இந்த அவலட்சணத்துக்கு ஆசை விடவில்லை! அவள் வண்ண ஓவியத்தைத் தீட்டச் செய்து அதைத் தன் சயன அறையில் மாட்டிக் கொண்டிருக்கிறான்; வெட்கக்கேடு!''

'இதென்ன, கிணறு வெட்டப் பூதம் புறப்படுகிறதே' என்று பயந்த ஜெயசிங்கன் தன் கலவரத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு அராபியனைப் பார்க்க, அவன் உணர்ச்சிகளை வெளிக் காட்டாத சிலையாக இருக்கக் கண்டு மனத்துக்குள் வியந்தான். விஜயாலயனின் முன்கோபம் நண்பனுக்குத் தெரியாததல்ல. ஆனால் தேவை ஏற்படும் போது அதை முற்றிலும் அடக்கிவிடக்கூடிய ஆற்றலும் அவனுக்கு இருப்பதை உணர்ந்து உள்ளூர மகிழ்ந்து போற்றினான். மது வேலை செய்து நாவைத் தளர்த்தவே பாராசிரயன் பேசிக் கொண்டே போனார்.

''இந்த மடையன் விஜயாலயன் இருக்கிறானே, அவன் என்னை அசடு என்று எண்ணிக் கொண்டிருக்கிறான். இவன் வேட்டையாடப் போனபோது குவளை என்றொரு குறிஞ்சி மகளைக் கண்டு மோகித்திருக்கிறான். அவள் பெரிய சாகசக்காரி. வெற்றிலைப் பாக்குடன் இவனையும் சுருட்டிச் சுருக்குப் பையில் போட்டுக் கொண்டு விட்டாள்! அவளை நம்பி இவன் ரகசியமாய்ப் படை திரட்டுகிறான்! காட்டிலே வீரர்களுக்குப் பயிற்சி தருகிறான். இதெல்லாம் எனக்குத் தெரியாது என்று வேறு எண்ணிக் கொண்டிருக்கிறான்! நான் பல்லவச் சக்கரவர்த்திக்கு அவ்வப்போது செய்தி அனுப்பிக் கொண்டுதான் இருக்கிறேன். அவர்தான் 'அவசரப்படாதே. பொறு!' என்று என் கையைக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறார். இல்லையென்றால் இவன் முயற்சிகளை ஆரம்பத்திலேயே நசுக்கி விட்டிருப்பேன்!''

''ஐயா! ஆச்சரியமாய் இருக்கிறதே! எப்படி உங்களுக்கு விஜயாலயனின் ரகசியங்களெல்லாம் தெரிய வந்தது?'' என்று கேட்டான் ஜெயசிங்கன்.

''அதுதான் ராஜ தந்திரம்! விஜயாலயனின் ஒற்றர் படைத் தலைவனே எனக்குச் செய்திகளைக் கூறிக் கொண்டிருந்தான். ஆனால் அவனும் தனது ஆண்டையைப் போலவே ஓர் அசடு! விஜயாலயன் அவனுடைய துரோகத்தைக் கண்டு பிடித்துச் சிறையில் தள்ளி விட்டான். முந்தாநாள்கூட அவனைப் பாதாளச் சிறையில் போய்ப் பார்த்தேன். விஜயாலயனும் உடன்வந்தான். சடை விழுந்த முடியும் தாடியும் குழி விழுந்த

### தேங்காய் ஏன் கொடுக்கிறீர்கள்?

கரந்தைக் கவிராசர் வேங்கடாசலம் பிள்ளை திருமண விழா ஒன்றில் கலந்து கொண்ட போது அவருக்குத் தேங்காய் வழங்கப்பட்டது. அதைக் கையில் வாங்கிக் கொண்டே கூறினார் பிள்ளை: 'தேங்குதல் என்றால் தங்கியிருத்தல். தேங்காய் என்றால் தங்கியிராதே என்பது பொருள்; ஆக தேங்காய் கொடுத்தால் போய் வா என்று பொருள்' எல்லோரும் சிரித்து விட்டனர்.

- கன்னூர் என். ஜே. சுந்தரமாறன்



# வானதி வெள்ளிவிழா அழைப்பு

25 ஆண்டுகளுக்கு மேலாக ஆயிரத்துக்கு மேற்பட்ட தரமான தமிழ் நூல்களை பல்வேறு துறைகளில் வெளியிட்டுவரும்

## வானதி பதிப்பக வெள்ளிவிழா

1982 மே 22 சனிக்கிழமை காலை 10-30 மணி முதல் இரவு வரை சென்னை மயிலாப்பூர் ஏ.வி.எம். இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடைபெறும்.

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளின் அருள்வாக்குகள்

**தெய்வத்தின் குரல்** (மூன்றாம் தொகுதி)

நூல் வெளியீடு தொகுத்தவர் : ரா. கணபதி

"வளரும் வானதி" வரலாற்று நூல் வெளியீடு

**25 தமிழ் எழுத்தாளர்களுக்குப் பாராட்டு**

வாரியார் சுவாமிகள், டாக்டர் ம.பொ.சி. மாண்புமிகு அமைச்சர் ஆர்.எம்.வீ, செட்டிநாட்டரசர், நெ.து.சு., கி.வா.ஜ., நீதிபதி மோகன், சௌந்தரா கைலாசம், சிவசங்கரி இன்னும் பல எழுத்தாளர்கள் கலந்து கொள்வர்.

இரவு 8 மணிக்கு டாக்டர் பத்மா சுப்பிரமணியம் பரத நிருத்தியம்.

அன்பர்கள் அனைவரும் வருக

வெள்ளி விழாவன்று மண்டபத்தில் வானதி நூல்களுக்கு 10% கழிவு தரப்படும்

**வானதி பதிப்பகம்**

13, தீனதயாளு தெரு, தியாகராயநகர், சென்னை-600 017



சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு

# லலிதா பார்மஸி

ஸ்தாபிதம் : 1942

தலைமை ஆபீஸ் : கும்பகோணம்-612001 (தமிழ்நாடு) (போன் : 123)

டிரக் லைசென்ஸ் நிர். 40/31-8-78

சட்டுத் தொகைக்கு மத்திய அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது

உங்களுக்குத் தேவையான **ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்**

நாள்பட்ட சிக்கலான வியாதிகளில் ஆயுர்வேத சிகிச்சை முறைதான் நிரந்தர பலனை அளிக்க வல்லது என்பது யாவரும் அனுபவ பூர்வமாக அறிந்ததே உங்கள் உபாதைகளுக்கு டாக்டர் **V.R.L. சர்மா** அவர்களிடம் நேரிலோ அல்லது 35 காசு தபால் தலையுடன் கடிதம் மூலமோ, கும்பகோணம் தலைமை ஆபீசுடன் தொடர்பு கொண்டு ஆலோசனை பெறலாம். கடிதங்களை தமிழில் அல்லது இங்கிலீஷில் Type செய்தோ அல்லது மிகத் தெளிவாகவோ எழுதக் கோருகிறோம். கடிதங்களிலும் முக்கியமாய் கார்டிலும் ரொம்பவும் நுணுக்கமாய் எழுத வேண்டாம் எனக் கூறுகிறோம். தெளிவில்லாமலும். பதிலுக்கு 35Np ஸ்டாம்ப் அனுப்பாமலும் வரும் கடிதங்களுக்கு பதில் எழுதப்பட மாட்டாது.

எங்களது எல்லா தயாரிப்புகளும் கீழ்க்கண்ட எமது பிராஞ்சுகளிலும் கிடைக்கும்.

1. லலிதா பார்மஸி, 52-A, மஹாதானத் தெரு, மாயூரம்-609 001 போன் : 379
2. லலிதா பார்மஸி, 81, வடக்கு வீதி, சிதம்பரம்-608 001
3. லலிதா பார்மஸி, 39, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600 017 போன் : 441454
4. லலிதா பார்மஸி, 105, கச்சேரி ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004 போன் : 73007

ஒவ்வொரு துளியிலும் தேர்ந்தெடுத்த தேங்காய்களின் நறுமணம்!

Yendelux
coconut oil



என்டிலக்ஸ்
தேங்காய் எண்ணெ

15, 4 கிலோ டின்களிலும் 1 Litre 500, 200 ml பாலிதின் பாட்டில்களிலும் கிடைக்கிறது.

மு. நாகலிங்க நாடார் சன்ஸ்
கொல்லம்—கேரளா
ன் : ஆபீஸ் : 2244, 4484, மில்ஸ் ; 2266, 4611

DISTRIBUTORS FOR TAMIL NADU
M. M. NAGALINGA NADAR
VIRUDHUNAGAR, Phone : 3107, 3745.

கண்களுமாய் அடையாளமே தெரியாதபடி மாறிப் போயிருக்கிறான். பாதாளச் சிறையில் அடைபட்டு மூளையே மழுங்கி விட்டது அவனுக்கு. பித்துப் பிடித்துச் சோகமாகப் பார்க்கிறான். துரோகத்துக்குக் கைமேல் பலன்.!''

பாராசிரயனைப்பாதாளச்சிறைக்கு அழைத்துச் சென்றது விஜயாலயன் வேடத்திலிருந்த ஆகவமல்லன் என்றும் பாராசிரயனின் ஆணையைத் தட்ட முடியாமல் சிறைக் கதவுகளை அவனுக்குத் திறந்து விட்டிருப்பானென்றும் அங்கு பாராசிரயனுக்கு யாரோ ஒரு பித்தனைக் காட்டி ஆகவமல்லன் என்று சொல்லியிருக்கிறானென்றும் புரியவே, தந்தை குமாராங்குசனின் தந்திரம் எப்படிப் பலித்திருக்கிறது என்று எண்ணி மன நிறைவும் மகிழ்ச்சியும் கொண்டான் விஜயாலயன்.

''இனி என்ன நேரும் ஐயா?'' —ஜெயசிங்கன் கேட்டான்.

ஆசனமொன்றில் அமர்ந்த நிலையிலிருந்த பாராசிரயனின் கட்டுப் போட்ட கால் எதிரே ஒரு முக்காலியில் தூக்கி வைக்கப் பட்டிருந்தது. ''நேர்வது என்ன? சக்கரவர்த்தி சரி என்று கூற வேண்டியதுதான். உடனே பல்லவ மேலாதிக்கப் படை இவன் ரகசியமாகத் திரட்டியுள்ள படையை நசுக்கிவிடும். ஆனால் சக்கரவர்த்தி ஏன் தாமதிக்கிறார் என்றுதான் புரியவில்லை. இப்போதுகூட அவர் கட்டளையை ஏற்றுத்தான் சந்திரலேகை சென்று கொண்டிருந்தேன்.....''

''அப்படியா? ரொம்ப முக்கியமான விஷயமோ?'' என்று ஜெயசிங்கன் கேட்டபோது பாராசிரயன் தமது கட்டுப் போட்ட காலில் படாத வகையில் மற்றொரு தொடையில் பணிப் பெண் ஒருத்தியை இழுத்து உட்கார வைத்துச் சிரித்துக் கொண்டிருந்தார். மதுவை அவளுக்கு ஊட்டித் தாமும் அருந்திக்கொண்டும் இருந்தார். அவளும் தன் கரத்தை அவர் கழுத்தைச் சுற்றி வளைய விட்டிருந்தாள்.

''சக்கரவர்த்தியின் கட்டளையை நிறைவேற்ற முடியாமல் இடையூறு நேர்ந்து விட்டதே! எங்களால் ஏதும் உதவ முடியுமானால் சொல்லுங்கள்'' என்றான் ஜெயசிங்கன் மறுபடியும்.

''ஒன்றும் பெரிய விஷயமில்லை. சந்திரலேகையிலும் என்னைப் போலவே ஒரு பல்லவ மாதண்ட நாயகர் இருக்கிறார். அவரைச் சந்தித்துப் பேசி, விஜயாலயன் சூழ்ச்சியில் முத்தரையருக்கும் ஏதாவது பங்குண்டா, அவரும் அனுமதித்த அளவுக்கு மேல் ஒரு வேளை படை திரட்டிக் கொண்டிருக்கிறாரா என்றெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும் என்று உத்தரவு. இதை ஒற்றறிந்த பிறகுதான் விஜயாலயன் மீது எடுக்க வேண்டிய நடவடிக்கை பற்றிக் காஞ்சி சக்கரவர்த்தியின் கட்டளை பிறக்கும்!''

''இவ்வளவுதானே? இதை நாங்களே தெரிந்து கொண்டு வந்து விடுகிறோம். சந்திரலேகையில் எங்கள் வியாபாரம் இரண்டே நாளில் முடிந்து விடும். போக வர இரு தினங்கள் என்றாலும் நாலு நாளில் திரும்பி வந்து தங்களுக்குத் தகவல் தருகிறோம். நீங்கள் இங்கேயே ஓய்வாக இருங்கள்.''

''ஓய்வாக இருக்க இந்த அழகிகள் என்னை விட்டால்தானே'' என்று கூறி ஆபாசமாகப் பெரிதாய்ச் சிரித்த பாராசிரயனின் மற்றொரு கரத்துக்குள் இரண்டாவதாக ஒரு பணிப் பெண்ணும் சிக்கியிருந்தாள் இப்போது!

மறுநாள் அதிகாலையில் சந்திரலேகை நோக்கி மறுபடி புறப்பட்ட நண்பர்கள் இடையில் தடங்கல் தடை ஏதுமின்றித் தலைநகரை நெருங்கினார்கள். அவர்கள் ஏறியிருந்த குதிரைகளும் வாணிபத்துக்குக் கொண்டு வந்திருந்த குதிரைகளும் விரட்டிய வேகத்தில் நுரை தள்ளின. எதிர் பார்த்த பல காரியங்கள் கைகூடப்போகிற ஆர்வம் காரணமாக அவர்கள் அரட்டையைத் தவிர்த்து ஆவேசவேகம் காட்டினார்கள்.

சந்திரலேகையின் கோட்டைச் சுவர் சமீபித்ததும்தான் கடிவாளத்தைச் சற்று இழுத்துப் பிடித்தார்கள். பெருமூச்சுக்கள் சற்று அடங்கியதும் ''வழியெல்லாம் யோசித்துக் கொண்டே வந்தேன். எனக்கு ஒன்றுதான் புரியவில்லை. தேரின் அச்சாணியைக் கழற்றிய நீங்கள் அதற்கு முன்பாகவே தேர்ப்பாகனை இழந்த குதிரைகள் தேரை இழுத்துக் கொண்டு தறிகெட்டு ஓடியபோது ஏதற்குப் பின் துரத்திச் சென்று அவற்றைக் கட்டுப் படுத்தி பாராசிரயனையும் காப்பாற்றினீர்கள்? அப்போதே சாரதி இல்லாத ரதம் எங்கேனும் மோதிச் சேதமுற்று பாராசிரயனும் விழுந்து காயம் பட்டுக் கொண்டிருக்க வேண்டியவன்தானே!'' என்று கேட்டான் ஜெயசிங்கன்.

''அப்படி நான் அவனைக் காத்ததால்தான் அவனுக்கு நம்மிடம் முழு நம்பிக்கை பிறந்தது. இல்லாதபோனால் ரத சாரதியை இழுத்துக் கீழே தள்ளியவன் என்ற அளவில் என் மேல் கோபம்தானே பெருகியிருக்கும் பாராசிரயனுக்கு? இவ்வளவு மனம் விட்டுப் பேசியிருப்பானா? உனது உபசாரனையை ஏற்று நமது உற்ற நண்பனாகவும் ஆகியிருப்பானா? உன்னிடம் தனது சிம்ம இலச்சினையையே கொடுத்து அனுப்பி விருப்பானா?''

''இளவரசே! உங்கள் இந்திர ஜாலத்துக்கு ஓர் எல்லையே இல்லையா?'' என்று ஜெயசிங்கன் வியந்தபோது அவர்கள் தலைநகரின் எல்லையை நெருங்கிக் கொண்டிருந்தனர்.

(தொடரும்)

**கேட்கலாமா?**

**கேட்பவர்: நமிருசகரம் மணி**

சென்னையில் தெருப் பெயர்களிலுள்ள ஜாதிப் பெயர்களை அழித்திருக்கிறார்கள். இதே மாதிரி ஊர்ப் பெயர்களிலுள்ள ஜாதிப் பெயர்களையும் அழிப்பார்களா? இதோ,சில சாம்பிள்கள்.

'முதலியார்' பட்டி 'ரெட்டியார்' பட்டி 'ஆசாரி' பள்ளம் 'வெள்ளாளன்' குளம் 'செட்டி' குளம் 'தேவர்' குளம்.



# சாதனை

● அரிஜன நண்பர்கள் எங்கள் குடும்பத்தில் கடந்த 40 ஆண்டுகளாக நெருங்கிப் பழகி வருபவர்கள். என் சகோதரி வீட்டில் 2 அரிஜனப் பெண்களை வேலைக்கு அமர்த்தியுள்ளோம். சமையல்வேலை யெல்லாம் அவர்கள் தான். என் வீட்டில் ஒரு அரிஜனப் பையனையே என் சகோதரனைப் போல் வளர்த்து வருகிறேன். அவன் சாப்பிட்ட இலையை என் குடும்பத்தினர் எடுத்து எறிந்து எச்சில் இடுவார்கள். அவன் சரளமாக எங்கள் குடும்பத்தில் பழகுவான். சமபந்தி போஜனம் என்பது வருடத்துக்கு ஒரு முறை நடப்பது போல் இல்லாமல் என் வீட்டில் பிரதி தினமும் சமபந்தி போஜனம்தான். நான் பல ஹரிஜன நண்பர்களுக்கு உதவி செய்தும் வேலை வாய்ப்பினைப் பெற்றுக் கொடுத்தும் இருக்கிறேன்.

ந. மனோகரன்,
பஞ்சாயத்து யூனியன் அலுவலகம்
புதுக்கோட்டை-622001.

● தரங்கம்பாடி சென்றிருந்தேன். கொஞ்ச நேரம் உலாவி வரலாமென்று கடற்கரைப் பக்கம் சென்றேன். என் நெஞ்சமெல்லாம் துணுக்குற்றது. நால்வரால் பாடல் பெற்ற ஸ்ரீ மாசிலாநாதர் ஆலயம் கடல் அலைகளால் இடிக்கப்பட்டு, கர்ப்பக்கிரகம் வரை அலைகள் மோதி மோதித் திரும்பிக் கொண்டிருந்தன. சிவ பக்தனை எனக்குப் பொறுக்கவில்லை. உடன் தினமலருக்குச் செய்தி கொடுத்துவிவரம் தெரிவித்தேன். செய்தி வெளியானதன் விளைவாக ஆலயப் பிரச்னை சட்ட மன்றத்தில் எழுப்பப்பட்டு ஆலயம் இடம் பெயர்த்துக் கட்ட முடிவாகியது. வேலை இன்னும் பூர்த்தியாகவில்லை.

பி. கலாநிதி,
சில்ப இல்லம்,
பாபநாசம்.



● 1980ம் வருஷம் ஒரு பையனுக்கும் பெண்ணுக்கும் திருமணம் முடித்து வைத்தேன். அது காதல் திருமணம்.பையன் தெலுங்கு; பெண் கன்னடம். பெண் வீட்டில் பலத்த எதிர்ப்பு. பையன் வீட்டில் சம்மதித்து விட்டார்கள். பெண் வீட்டில் வேறு வரன் அவர்கள் ஜாதியில்(கன்னடம்)பார்த்துவிட்டார்கள். பெண் தான் காதலித்த பையனைத்தான் பண்ணிக் கொள்வேன் என்று என்னிடம் சொல்லி அழுதாள். உடனே நான் பையனைப் பார்த்துப் பேசி ஆழ்ந்த காதலை உறுதிப் படுத்திக் கொண்டேன்.உடனடியாகத் திருமணம் நடக்க வேண்டும் என்றேன்.

ஏற்கனவே நான் அவளுக்குப் பாத்திர மெல்லாம் வாங்கி வைத்திருந்தேன். அதெல்லாம் சிநேகிதிகள் வீட்டில் வைத்துவிடு என்றேன். இந்த விதமாகவே துணி மணிகள் அவளுக்குத் தேவையான எல்லாவற்றையும் அவர்கள் வீட்டுக்குத் தெரியாமல் சிநேகிதிகள் வீட்டில் வைத்துவிட்டு இருவரும் முதல் நாள் இரவு என்னிடம் மட்டும் சொல்லிக்கொண்டு பெண் வீட்டுக்குத் தெரியாமல் வேலைக்குப் போகிறாற்போல் போனார்கள். ஏனென்றால் இருவரும் வேலை செய்பவர்கள். ஆந்திராவில் அந்தப் பையனின் அக்கா வீட்டில் நல்ல முறையில் சாஸ்திரப் பிரகாரம் கல்யாணம் நடந்தது. இன்றுவரை இந்தக் கல்யாணத்துக்கு மூல காரணம்

# சாதனை!



நான்தான் என்று இரு வீட்டாருக்கும் தெரியாது; பிறகு மூன்று மாதம் கழித்துப் பெண்ணும் மாப்பிள்ளையும் பெண் வீட்டுக்கு வந்தார்கள். அவர்களும் மன்னித்து ஏற்றுக் கொண்டார்கள். இப்பொழுது ஒரு பெண் குழந்தையும் பிறந்து நன்றாக இருக்கிறார்கள்.

ஆர். வி. சரோஜினி
விஜயலட்சுமிபுரம், அம்பத்தூர்,
சென்னை-53



● பத்மா என்பவள் வீட்டு வேலை செய்யும் ஓர் ஏழைப் பெண். இரண்டாவது வகுப்பு வரைக்கும் பள்ளி சென்று பின்பு படிப்பை மறந்தவள். எங்கள் வீட்டுக்குப் பால் கொடுக்கும் பெண்ணும் அவளுமாக ஒரு நாள் என்னிடம் வந்து படிக்கச் சொல்லிக் கொடுக்குமாறு கேட்டார்கள்.

வெகு சீக்கிரத்திலேயே படிக்கவும் கடிதம் எழுதும் அளவுக்கும் தமிழ் கற்றார்கள். பல இலக்கமுள்ள எண்களின் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், கறிகாய் விற்பனைக்கான கிலோகிராம், கிராம், ரூ. பைசா கணக்குகளும் கற்றாள்.

தந்தைக்கு எழுதிய கடிதத்தை எனக்குப் பெருமிதத்துடன் காட்டி அவள் ஆனந்தக் கண்ணீர் வடித்து நின்றதை என்றும் நான் மறக்க மாட்டேன்.

திருமதி வெங்கட்ராமன்,
4, 5வது அவின்யூ,
கல்பாக்கம்



● நான் 1975ம் ஆண்டில் இந்த வீட்டுக்குக் குடி வந்த போது என்னைச் சுற்றிலுமுள்ள ஆறு குடும்பங்களும் ஒருவருக்கொருவர் சண்டை இட்டுக் கொண்டிருந்தார்கள்.

நாளடைவில் எல்லோருடனும் பழகி அவர்களைப் புரிந்து கொண்டேன்.

ஒருவர் நினைத்தை மற்றவர் விரும்புவதாக முதலில் சொன்னேன். அவர்களுடைய உயர்வை ஜோடித்துப் பேசி ரொம்பச் சிரமப் பட்டு, ஆறு குடும்பத்தாரிடமும் மனத்தை மாற்றிப் பண்பான நேசத்தை வளர்த்தேன். இப்போது ஒற்றுமையாய் இருக்கிறோம்! இதை ஒரு ''குடும்ப ஒருமைப்பாடு'' சாதனையாகக் கருதி மகிழ்கிறேன்!

எஸ். கலா,
கல்கத்தா 26



● எல்லோரும் தண்ணி போட்டுத்தான் ஆடுவார்கள். இங்கு தண்ணியே ஆடுகின்றது! 1967-68ல் அன்று நகரில் நடந்த உலக வர்த்தகப் பொருட்காட்சியில் ஜெர்மானியர்கள் மிகப் பிரும்மாண்டமான இசை நீரூற்றினை (Musical fountain) அமைத்திருந்தார்கள்.

அப்பொழுது கிண்டி பொறியியல் கல்லூரியில் முதுநிலைப் பொறியியல் பட்டப்படிப்பைச் செய்து வந்த நான் அதைக் கண்டதும் அது மாதிரி ஒன்று செய்ய முடிவெடுத்தேன்.. 1980ம் ஆண்டு தமிழ் நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் அமைத்த சுற்றுலாப் பொருட்காட்சியில் அமைக்க வாய்ப்பளித்தார்கள். ஜெர்மானியர்களுக்குப் பிறகு இந்தியாவில் முதல் முறையாக இந்தியப் பொறியியல் வல்லுனரால் அமைக்கப்பட்ட



இசை நீரூற்றை நான் அமைத்தேன். சுமார் ரூ. 50,000 செலவில் அமைக்கப்பட்ட இந்த நீரூற்றைப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கண்டு ரசித்தனர். விளம்பரம் அதிகமில்லாததால் எனது சாதனை வெளியில் தெரிய வராமல் போய்விட்டது.


கு. நா. சண்முகசுந்தரம்,<br>
பேராசிரியர், மின்னணுவியல் மற்றும் தொடர்பியல் துறை,<br>
அரசினர் பொறியியல் கல்லூரி,<br>
கோவை–641013


● கம்பெனியை இழுத்து மூட வேண்டிய நிலை. எதிலும், யாரிடமும் ஒழுங்கோ, கட்டுப்பாடோ பெயருக்கும் கிடையாது. நஷ்டம் சில லட்சங்கள். இந்தச் சூழ்நிலையில்தான் அந்தத் தொழிற்சாலையின் பொறுப்பை ஏற்றுக்கொண்டேன். சீர்திருத்தங்கள் பல தேவைப்பட்டன. ஆனால் எங்கே ஆரம்பிப்பது என்பதுதான் தெரியவில்லை.

காலை எட்டு மணிக்கு ஆரம்பிக்கும் தொழிற்சாலைக்குப்பெரும்பாலான தொழிலாளர்கள் 8.30க்குக் குறைந்து வருவதேயில்லை. கேட்டால் அதுதான் வழக்கம் என்றார்கள். உடனே ஒரு டைம் பஞ்சிங் கிளாக் வாங்க ஏற்பாடு செய்தேன். தொழிலாளர்கள் முதலில் தங்கள் கார்டை பஞ்ச் செய்துவிட்டுத்தான் உள்ளே வரவேண்டும். இரண்டே நாட்களில் சரியான நேரத்துக்குத் தொழிலாளர்கள் வர ஆரம்பித்தனர்.

ஒரு வேலையைச் செய்து முடிப்பதற்கு இஷ்டப்பட்ட நேரத்தை எடுத்துக் கொண்டனர். அரை மணியில் முடிக்க வேண்டிய ஜாபுக்கு இரண்டு மணி நேரம்! டைரக்டர்களின் அனுமதி பெற்று ஒரு Methods Engineerஐ வேலைக்கு சேர்த்தேன். அவர் Time study நடத்தி ஒவ்வொரு வேலைக்கும் காலத்தை (Standard time) நிர்ணயம் செய்தார். சீக்கிரத்திலேயே தொழிலாளர்கள் தங்கள் நேரத்தை வீணடிப்பதைப் படிப்படியாகக் குறைத்துக் கொண்டனர். உற்பத்தி அதிகரிக்க ஆரம்பித்தது.

## வாழ்த்துக்கள்

சாதனை புரிந்த அனைவருக்கும் வாழ்த்துக்கள்

வழிகாட்டிகளான உங்களை வணங்குகிறோம்

இங்கு பிரசுரமான கட்டுரைகள் பரிசு பெறுகின்றன

சாதனைக்கு ஏற்ற பரிசு அல்ல;

எமது பாராட்டின் ஓர் அடையாளமே. அன்புடன் அங்கீகரிக்கவும்

-ஆசிரியர்

தொழிலாளர்களை ஊக்குவிக்க Incentive system துவக்கி வைத்தேன். திறமையைக் காட்டி உற்பத்தியைப் பெருக்கினால் ஊதியம் அதிகரிக்கும். உற்பத்தியும் பெருகி, தொழிலாளர்களும் மகிழ்ச்சி யடைந்தனர்.

சீக்கிரத்திலேயே கான்டீன் வசதியும் மருத்துவமனை வசதியும் செய்யப்பட்டன.

நஷ்டத்தில் ஓடிய தொழிற்சாலை இன்று நல்ல நிலையில் இயங்குவதற்குத் தொழிலாளர்களும் தொழிற்சாலை ஊழியர்களும் தான் காரணமென்றாலும் என்னுடைய சிறிய 'சாதனை'யையும் சொல்லிக் கொள்வதில் தவறில்லை அல்லவா?


பாரத்வாஜன்,<br>
திருநெல்வேலி


● என் கணவர் தினமும் சீட்டு விளையாடிப் பணத்தைத் தொலைத்து வந்தார். பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். ஒரு நாள் அவர்கள் விளையாடும் இடத்துக்கே போய் விட்டேன். அங்கு இவரும் மற்றும் நான்கு பேர்களும் உட்கார்ந்து ஆடிக் கொண்டு இருந்தார்கள். இவருக்கருகில் காலியாய் இருந்த ஒரு சேரில் நான் உட்கார்ந்து கொண்டேன்.

இவரிடம், ''எனக்கும் பழகிக் கொடுங்கள் நீங்கள் தொலைக்கும் பணத்தை யெல்லாம் நானாவது ஜெயிக்க முடியுமா என்று பார்க்கிறேன்'' என்று கூறினேன். அதைக் கேட்டு அவர் உடனே எழுந்துகொண்டு வீட்டுக்கு வா'' என்றார். 'இன்று தொலைந்தோம்' என்று எண்ணிக் கொண்டே வீட்டினுள் நுழைந்த என்னிடம் அவர், ''என்னை மன்னித்துக் கொள். இனிமேல் சத்தியமாக நான் சீட்டு விளையாட மாட்டேன்'' என்று சத்தியம் செய்து கொடுத்தார். அன்றிலிருந்து அவர் திருமண வீட்டில் கூட சீட்டு விளையாடுவ தில்லை. அது மட்டுமல்ல. இப்போது அலுவலகம் போய்விட்டு வந்து அவரது உறவினர் கடையில் Part time job செய்கிறார்.


ஜெயலட்சுமி,<br>
மேட்டுப்பாளையம்<br>
நீலகிரி.


● முற்றிலும் காது கேளாதவர்.

எழுதிக் காட்டினால் மட்டும் புரிந்துகொள்பவர்.

ஆங்கில இலக்கியத்தில் பி. ஏ., இந்தியில் எம். ஏ. பி.எச்.டி. பட்டங்கள் பெற்றவர்.

ஏழாண்டுகளாகப் புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் துணைப் பேராசிரியர். (இடையில் ஓராண்டு மேலூர் கல்லூரியில்)

திருச்சி வானொலியில் பலமுறை பேசியவர். வானொலிக்காக நிகழ்ச்சிகளை மொழிபெயர்த்தவர்.

ராஷ்டிரபதியால் அளிக்கப்பட்ட உடல் ஊனமுற்றோருக்கான தேசிய விருது பெற்றவர்.

வானதி, மணிவாசகர் நூலகம் வெளியிடவிருக்கும் இரு நூல்களை எழுதியவர்.

அவர் பெயர் (மன்னிக்கவும், என் பெயர்): டாக்டர் என். ஸ்ரீதரன் எம். ஏ., பி.எச்.டி

# அசல் க்ளுகோன்-டி ⓣ ஒன்றே ஒன்று தான் உண்டு.

## அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.




மட்டமான போலிகள் பலவற்றுள், க்ளாக்ஸோ நிறுவனத் தயாரிப்பான அசல் க்ளுகோன்-டி யினை நீங்கள் வாங்குவது முக்கியம். இல்லையெனில், போலிகள் மூலம் உங்கள் குடும்ப உடல்நலத்திற்கே பேராபத்து வரலாம். க்ளாக்ஸோ நிறுவனத்தின், முற்றிலும் நம்பிக்கைக்குரிய தயாரிப்பாகும் க்ளுகோன்-டி; வைட்டமின் $D_3$, ஃபாஸ்ஃபரஸ், கால்ஷியம் ஆகியன செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர் அடங்கியது. தங்களுக்குத் தேவையான போது சக்திபெற லட்சக் கணக்கானோர் அருந்துவது இது.

க்ளுகோன்-டி தயாரிப்போர், க்ளாக்ஸோ — பலவகை உணவுப் பண்டங்களுக்கும், உயிர்காக்கும் மருந்துகளுக்கும் புகழ்பெற்ற நிறுவனம். வாங்கும் க்ளுகோன்-டி பேக்கெட் அசல்தானா எனப் பார்த்து வாங்குங்கள்.

**க்ளுகோன்-டி** ⓣ

## சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.

## **க்ளாக்ஸோ** நிறுவனம் அளிக்கிறது.

ⓣ டிரேடுமார்க்

HTB-GLL-7627-TL

# கவர்ச்சிகள்

## கிருஷ்ணமணி

6

முரளிதரன் நினைத்தது போல் ஹிரண்மயி அவனிடம் நெருக்கமாகப் பழகவில்லை. வேலை விஷயங்களில் எந்த அளவுக்குப் பேச வேண்டுமோ அவ்வளவுதான் பேசினாள். அவனால் அவளுடைய போக்கை ஊகிக்க முடியவில்லை. அவளுக்குத் தன் மீது கோபம் இன்னமும் தணியவில்லை என்றே எண்ணினான்.

இரண்டாம் நாள் இரவு எட்டு மணியாகி விட்டது. ஹிரண்மயி கடைசிலே அவுட்டை முடித்து விட்டாள். சுரேஷ் அவளருகேவந்து மெல்லிய குரலில் கேட்டான்: 'ஹிரண்மயி உனக்கு நான் என் காரிலேயே லிஃப்ட் தரட்டுமா?''

முரளிக்கு அவன் கேட்டது என்னவோ போலிருந்தது. சுரேஷின் குணம் தெரிந்த எந்தப் பெண்ணும் அவனோடு தனியாகக் காரில் போக மாட்டாள். எங்கே இவள் சரியென்று சொல்லிவிடப் போகிறாளோ என்று அவனுக்கு அச்சமாக இருந்தது. ஹில்டா



லைப் போல இவளும் மற்றொரு ஹில்டாவாக ஆகிவிடுவாள்.

பெண்களே பொதுவாக வசதி வாய்ப்புள்ளவனைக் கண்டால் மயங்கித்தான் போகிறார்கள். ஒரு தமிழ் சினிமாவில் கார் சவாரி போய்க் கற்பைப் பறி கொடுத்த ஒரு பெண்ணைக் காவிய நாயகியாகக் காட்டியிருந்தார்கள். அந்தக் கதையின் நீதி போதனையை இவன் இப்போது நினைத்துக் கொண்டான். இசைகேடாக ஒரு பெண், அவ்விதம் கற்பிழக்கும்படி நேரிட்டால் வெளியே எவரிடமும், பெற்ற தாய் உட்பட, சொல்லாமல் இருந்துவிட வேண்டும். சொன்னால் அவளுக்கு வாழ்வு போய்விடும்(!) முரளிக்கு அந்தக் கதையின் தத்துவம் சிரிப்பை மூட்டியது. மனத்தளவில் ஒருவனிடத்தில் தன்னை இழக்கும் ஒருத்தியை விட, உடலளவிலே



இழக்கும் ஒருத்தி மோசமாகப் போய்விட்டாளோ என்று கூடத் தோன்றியது. கற்பு என்பது ஒரு கருத்தோற்றம்தானே? மனத்தை இழந்தாலும் அது பறிபோனது போல் தானே. உடல் சேர்க்கை, விபத்து ஒன்றைப் போல ஏற்பட்டு விடும்பொழுது, அதைப் பெரிது பண்ணும் சமுதாயம், அவ்வுண்மையே மறைக்கப்பட்டு விடுமானால் என்ன செய்து விடும்? உலகமும், உள்ளமும் எத்துணை பாவ ரகசியங்களைத் தம்முள் அமுக்கி வைத்துக்கொண்டிருக்கின்றன.

ஹிரண்மயி சொன்னாள்: 'ஹோ! தாங்க்ஸ்! நான் பஸ்ஸிலேயே போயிடறேன்!' முரளிதரனுக்கு மூச்சு நிதானத்துக்கு வந்தது.

வேலை முடிந்ததும் முரளிதரன் புறப்பட்டான். ஹிரண்மயி அவனுக்குப் பின்னால் வந்து கொண்டிருப்பதை அவனால் உணர முடிந்தது. அவளிடம் தானாக வலியச் சென்று பேச அவனுக்கு மனமில்லை. ஆனாலும் பேச வேண்டும் போல் மனம் படபடத்தது.

ரஸ்தாவின் மறுபுறம் இருக்கும் பஸ் ஸ்டாண்டை அடையக் கடக்க வேண்டிய இடத்தில் வெள்ளைக் கோடுகளுக்கு நடுவே நின்றுகொண்டான். சிறிது நேரத்தில் அவளும் அவன் பக்கத்தில் வந்து நின்றாள். யதேச்சையாகப் பார்ப்பது போல் அவனைப் பார்த்துப் புன்னகைத்தாள். அவனும் புன்னகைத்தான்.

''ரெண்டு நாளா என்கிட்டே ஏன் சரியாகவே பேசல்லே?''

''பயம்தான் காரணம்!''

''உனக்கா?''

''ஏன் இருக்கக் கூடாதா? பூனை போல் இருக்கிறவங்களையே நம்பக் கூடாது.''

டிராஃபிக் கான்ஸ்டபிள் விசிலடித்தான். வண்டிகள் நின்றன. அவர்கள் கூட்டத்தோடு ரஸ்தாவைக் கடந்தனர்.

அவள் மாம்பலம் பஸ் வந்ததும் ஓடிச் சென்று ஏறிக் கொண்டாள். அவனும் அதே பஸ்ஸில் ஏறினான். அவளுக்குப் பக்கத்து ஆசனம் காலியாக இருந்தது. அவன் அவளையே பார்த்தான். அவள் சற்று நகர்ந்து அவன் உட்காரலாம் என்று பாவனை காட்டினாள். முரளிதரனுக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

''கோபம் போயிட்டதோ?''

''முரளி! யூ ஆர் எ ரோக். எ ரியல் ரோக்!''

அவன் திடுக்கிட்டான். ஐம் ஸாரி ஹிரண்மயி!''

''பட் ஐ லைக் ரோக்ஸ்!'' சொல்லிவிட்டு அவள் குழந்தை போல் சிரித்தாள்.

அவனுக்குத் துணிவு வந்தது. தாராளமாக உட்கார்ந்து கொண்டான். அவளுடைய இடது புஜம் அவனுடைய மென்மையானதோளை பஸ்ஸின் குலுங்கலில் வலுவாக அழுத்தியது. அவளுக்கு அவனுடைய ஸ்பரிசம் தேவைப்பட்டது போல் அவள் உட்கார்ந்திருந்தாள்.

அவன் சொன்னான்: ''எனக்கு ஷேக்ஸ்பியரின் ஹாம்லெட்டில் ஒரு வரி நினைவுக்கு வருகிறது.''

''ஹாம்லெட்டிலா? என்ன அது?''

''காதலிக்கும் இளம் பெண்ணின் மடியில் முகம் புதைத்துக் கொள்வதில் உள்ள சுகம் வேறெதிலே உண்டு?''

''முரளீ!'' அவள் பொய்க் கோபம் காட்டினாள். மேலும் சொன்னாள்: ''கவிஞர்கள், எழுத்தாளர்கள் எல்லோருமே ஓரளவு போக்கிரிகள்தான். ஆனால் அவர்களால் தான் வாழ்க்கையில் சுவையே ஏற்படுகிறது. இல்லாவிட்டால் உண்பதும், உடுப்பதும், உறங்குவதும் என்று ஒரே ரொட்டீன் ஆகச் சலித்துப் போய் விடும்!''

''என் நண்பன் ராஜாமணியிடம் நான் ஒரு பெண்ணைக் காதலிக்கிறேன் என்று கூறியவுடன் அவன் காதலில் மோதுண்ட ஒவ்வொருவனும் கவிஞனாகி விடுகிறான் என்றான். நீ சொல்வதைப் பார்த்தால் நான்கூடக்

கவிஞராகி விட்டேன் போலிருக்கிறது!'' என்றான் முரளி.

''வாழ்க்கையை நாம் எப்படி நோக்கு கிறோமோ அது போலவே அது நமக்குக் காட்சி தருகிறது. அடிப்படையில் நாம் இருவரும் கவிஞர்கள்தானே. இந்த மாதிரி பொதுப்படையான ஓர் உணர்ச்சிதான் இரண்டு மாறுபட்ட போக்குடையவர்களைக் கூட ஒன்றாக இணைக்கிறது!''

''ஸோ! நீ சொல்கிறபடி பார்த்தால், இப்போ உன் மனசு என்னோட இணைந்து விட்டது என்று கொள்ளலாமா?''

அவள் அவனையே முறைத்தாள்.

அவன் இறங்கும் இடம் வந்தது. இருவரும் இறங்கினர்.

''ஹிரண்மயி! காப்பி குடிக்கலாமா?''

''நோ! தாங்க்ஸ்!''

''நான் உன் வீட்டு வரைக்கும் வரட்டுமா?''

''தேவையில்லே. அருகாமையிலேதான் இருக்கிறேன். நானே போயிடுவேன்!'' சற்று நிறுத்தினாள்.

''நாம் சந்திக்கும்வரை குட்பை!''

''குட்பை!''

அவள் போவதையே அவன் கண்கள் பார்த்தன. தன்னுடன் அவள் எப்போதும் இருக்க மாட்டாளா என்று அவன் மனம் ஏங்கியது. மெள்ள லாட்ஜை நோக்கி நடந்தான்.

வேறு மாநிலத்தைச் சேர்ந்தவள். அவள் தாய்மொழி வேறு. தனக்கும் அவளுக்கும் ஏற்பட்டிருக்கும் இந்த மன ஒட்டுதல், திருமணம் ஆவதற்குச் சரியானதாக இருக்குமா? திருமணம் செய்து கொண்டாலும் இருவரும் ஆங்கிலத்தில்தான் உரையாட வேண்டும். அவளுக்குத் தமிழ் கொச்சையாகப் பேச வந்தது. தமிழைக் கற்றுக்கொடுத்துவிடலாம். அதுவரையில் உணவுப் பழக்க வழக்கங்களில் பெரிய மாறுதல் இல்லை. அவளும் அரிசி வைத்தான் சாப்பிட்டுப் பழகி விருக்கிறாள்.

**ஆ**ல்வி டெலிபோன் இலாக்கா உலகப் புகழ் பெற்றது — தவறுகள் புரிவதில்! ஒருவருக்குக் கடந்த 30 ஆண்டுகளுக்கான டெலிபோன் கட்டணமாக ரூ. 10,003.85க்கு 'பில்' வந்தது. இதில் விசேஷம் என்னவென்றால், இவருக்கு டெலிபோன் இணைப்பு வந்ததே இரண்டு மாதத்துக்கு முன்புதான்!

— சம்பத் குமாரி
ஆதாரம்: லண்டே



தன் கற்பனை சிறகடித்துப் பறப்பது இப்போது அவனுக்கே வேடிக்கையாக இருந்தது. ராஜாமணி சொல்வானே அதுபோல, ஆணாகப் பிறந்த ஒவ்வொருவனும் தன்னையே ஒரு அடிக்கோடாகக் கொண்டுதான் மற்றவர்களைத் தன் மனச் சித்திரத்தில் வரைகிறான். ஹிரண்மயி தன் மனத்தில் என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாளோ? சகஜமாகப் பழகுவதாலேயே அவள் தன்னை மணம் புரிந்து கொள்ளச் சம்மதித்து விடுவாள் என்று எப்படி நிச்சயம் சொல்ல முடியும்? இப்போது அவனுக்கு மனம் குழம்பியது.

சில நிமிடங்கள் ராஜாமணியுடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்தான். ராஜாமணி எதையும் நடைமுறையாக, செய்முறையாக அலசிப் பார்க்கும் பண்புடையவன். நடைமுறைக்கு ஏற்காததைச் சட்டென்று அவனால் ஒதுக்கிக் கொள்ள முடிந்தது. சிக்கலான ஒரு விஷயத்தைப் பற்றிப் புரிந்து கொண்டு, அதை ஏற்றுக் கொள்ளவோ, ஒதுக்கித் தள்ளவோ அவனால் முடிந்தது. வெகு இயல்பாக அவன் இதைச் செய்தான். மனம் இறுகிப்போன ஒரு துறவுப் போக்கு. எதிலும் பற்று அற்றவன் போல் அவனால் பேச முடிந்தது. தன்னால் ஏன் அவ்விதம் இருக்க முடியவில்லை! உணர்ச்சி பூர்வமாக எதையும் அணுகுவதை விட அறிவுப் பூர்வமாக அணுகுவதே சிறந்தது என்று ராஜாமணியைப் போன்று தன்னாலும் ஏன் கருதிச் செயலாக்க முடியவில்லை?

ஹிரண்மயி தனக்கு ஏற்றவளாக வாழ்க்கைப் பாதையில் வழிநடப்பாளா? புதிராக இருப்பவள்தான் பெண்ணோ? எந்தப் புதிருக்கும் ஒரு தீர்வு முறை இருந்தாக வேண்டும். அவனவன் வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை, புதிர்களை அவனவனேதான் தீர்த்துக்கொள்ள வேண்டும். மற்றவனுடைய உதவியை எதிர்பார்க்கலாமோ? இடையறாத அனுபவங்கள்தாம் வாழ்க்கை என்றால், இதுவும் ஒருவகை அனுபவம்தானே? அவன் மனம் பலவாறாகச் சிந்தித்தது.

## 7

சிலருக்கு வாழ்க்கையில் ஓரளவுமுன்னேற்றம் ஏற்பட்ட பிறகு வெற்றி மேல் வெற்றியாக வந்து குவியும். தன்னுடைய பதினெட்டாவது வயதில் மெட்ரிகுலேஷன் தேர்வில் தோல்வியடைந்த ராமநாராயணனுக்கு உலகமே தன்னைச் சவாலுக்கு அழைத்தது போல் தோன்றியது. சொற்ப வருமானம் உள்ள குடும்பத்தில் விதவைத் தாயும், அண்ணனும் சேர்ந்து அவனுடைய தோல்விக்காக வசை பாடித் தீர்த்தார்கள். தாலுகா ஆபீஸ் குமாஸ்தாவான அண்ணனுடைய மனைவிக்குத் தன்னுடைய மைத்துனன் இன்னும் ஒரு முறை தேர்வு எழுதுவதுகூட வீண் என்றே தோன்றியது. இரண்டாம் முறையாகத் தேர்வு எழுதினால் நிச்சயம் பாஸ் செய்துவிட முடியும் என்ற நம்பிக்கையில் ராமநாராயணன் சொன்னான்:

'அண்ணா! நான் கவனமாகப் படிக்கிறேன். நிச்சயம் தேறிவிடுவேன். ப்ளீஸ் ஹெல்ப் மீ!'

# கடுகளவு ஓ.ஓ.பி நீலம் கடலளவு வெண்மை

- ஜெர்மன் தொழில் நுட்பத்தில் உருவான உயர்ந்த ரக நீலம்.
- கூடுதலான வெண்மை சக்தி.
- நீரில் சீராகக் கரைவ-தால் ஆடைகளில் நீல புள்ளி விழாது.
- விலையோ அதிகம் இல்லை.




# ஓ.ஓ.பி
## நீலம்

SAA/UPL/2590

# மங்கையர் மலர்

## நங்கையர் விரும்பும் நன் மலர்

அண்ணன் மனைவியின் முகத்தைப் பார்த்தான்.

''காவேரிக் கரையிலே குளிக்க வர்ற பொம்மனாட்டிகளை முறைச்சுப் பார்த்துண்டு கண்ட காலிப் பயல்களோட சேர்ந்துண்டு சினிமாப் பார்த்தாப் படிப்பு எப்படி வரும்? கொஞ்சமானும் பொறுப்பு வேணும்? படி படின்னு சொன்னப்பக் கசப்பா இருந்தது. இங்கேயோ தொட்டுக்கோ துடைச்சிக்கோன்னு இருக்கு. ஒருத்தர் சம்பாதிச்சு பெரியவா நாலு பேர், குழந்தைகள் ரெண்டு சாப்பிட வேண்டியிருக்கு. இன்னும் ஒரு வருஷம் யார் இந்த அவஸ்தையெல்லாம் படறது. படிச்ச படிப்புக்குக் கிடைக்கிற உத்தியோகத்தை ஏத்துக்கவேண்டியதுதான். கூடப் பொறந்த தோஷத்துக்காக என்ன செய்யணுமோ அதைச் செஞ்சாச்சு. நமக்கும் ரெண்டு பிறந்திருக்கு. இனிமே அதுகளையும் கவனிக்கணும். நானும் கிழமைன்னு சொன்னா, கட்டிக்க நல்லதா ஒரு புடவையில்லே எனக்கு. நீங்க எது செய்வேளோ என்ன பண்ணுவேளோ! நான் சொல்றதைச் சொல்லிட்டேன். உங்க இஷ்டம்'' என்றாள் மன்னி. அவள் குரலில் வெறுப்பும் ஆத்திரமும் சேர்ந்து ஒலித்தன.

அம்மாவுக்கு வருத்தமாகப்போய்விட்டது. துக்கம் பொங்கியது. தன் வைதவ்யக் கோலமும், மூத்த பிள்ளையின் மௌனமும், அவன் மனைவியின் ஏசலும் அந்தத் தாயுள்ளத்தை வாட்டியெடுத்தன. அழுத குரலில் அம்மா சொன்னாள்:

''கேட்டுண்டியாடா! உனக்கு இன்னும் உடம்பிலே ரத்தம் ஓடிண்டு இருக்கா இல்லே வெந்நீர் ஓடிண்டு இருக்கான்னு நேக்குப் புரியல்லே. மானம் ரோஷம் இருந்தா, உன் சோத்துக்கு நீ சம்பாதிச்சுக்கோ. அவர் போகச்சே ஆஸ்தியை வைக்கல்லேன்னாலும் ரெண்டு பிள்ளையை வெச்சுட்டுப் போயிருக்காரேன்னு எல்லாரும் சொன்னாடா! உன்னை வளர்த்தேன். நீ ஆண் பிள்ளையா இல்லாம அணிப் பிள்ளையா, கிரிப்பிள்ளையா இருப்பேன்னு நான் நினைக்கல்லே. தென்னம்பிள்ளை வச்சால்கூட ஏழு வருஷத்திலே பலன் தரும்பா! நோக்குப் பதினெட்டு முடிஞ்சு இந்த ஆவணிக்குப் பத்தொன்பது ஆரம்பிக்கப் போறது. போடா! பொழைக்கிற வழியைப் பாரு. நான் அவனைப் பெத்தவ. அதனாலே எனக்கு அவன் சோறு போடறான். உனக்கு உன் கால்லே நிக்கிற வயசாச்சு. அவனும் சம்சாரியாயிட்டான். உங்க மன்னி சொல்றாங்கறு நிஷ்டூரப்பட்டுக்கிறதிலே பிரயோஜனமில்லே. புத்தி உள்ளவனா யிருந்தா பிழைச்சுக்கோ போடா!'' என்றாள்.

அண்ணன் பதிலேதும் பேசவில்லை. மன்னி தன் ஆத்திரத்தை யெல்லாம் சேர்த்து மோவாயைத் தோளில் இடித்துக் காட்டி விட்டு, உள்ளே போனாள். ராமநாராயணன் அண்ணனையே பார்த்தான்.

''அங்கே இன்னும் என்ன செஞ்சிண்டிருக்கேள்!'' உள்ளேயிருந்து மன்னியின் குரல் கேட்டது. பேசாமல் அண்ணா எழுந்து உள்ளே போய்விட்டான்.

அம்மாவின் கண்களில் நீர் வழிந்துகொண்டிருந்தது. ராமநாராயணனால் தாங்க முடியவில்லை.

''போறேம்மா! நானும் ரோஷக்காரியான உன் வயித்திலே பொறந்தவன்தான்கிறதை நிரூபிச்சுக் காட்டறேன். இனி இந்த வீட்டுப் படி ஏறினாக் கேளு! எனக்கு மட்டுமில்லேம்மா உனக்கும் வேண்டா வெறுப்பாத் தான் இங்கே சோறு போடறா. உன்னையும் என் பராமரிப்பிலே ஜாம் ஜாம்னு வச்சிக்கறேன். நான் எங்கே போறேன்னு கேட்காதே. ஆனா நிச்சயம் தற்கொலை பண்ணிண்டு சாகமாட்டேன். நான் வாழப் பொறந்தவன். இன்னிக்குக் காலிப் பயல்னு சொல்லாமல் சொல்லிக் காட்டின இதே மன்னி வாயாலே ஆயிரம் தடவை வாங்கோன்னு என்னைக் கூப்பிட வைக்கல்லே நான்எங்கப்பனுக்குப் பொறந்தவன்இல்லே!'' உணர்ச்சி வேகத்தில் அவனுக்குநாக்குழறியது. வியர்வை அவனுடைய இள மீசையில் அரும்பியது. தாயின் பாதங்களைத் தொட்டு வணங்கினான்.

''வரேன்மா!''

''டேய்! சாப்பிட்டுட்டுப் போடா!''

''ஊஹூம்! வேணும். சாப்பிட்டா பசியாறிடும். பசியாறினாத் தூக்கம் வரும். ரோஷம் போயிடும். இனிமே நான் சம்பாதிச்சுத்தான்சாப்பிடுவேன். அண்ணன் கிட்டேச் சொல்லிடு!'' குரல் கேட்டு வெளியே வந்த அண்ணன் கிண்டலாகக் கேட்டான்.

''சர்டிபிகேட் வேண்டாமோ சாருக்கு! பெயில்னு சொன்னாலும் எல்லாரும் அதைக் கேப்பாளுங்கடா!''

''ஹூம்! நீயே வெச்சுக்க அதை! நேக்கு எதுவும் வேணும். நான் வரேன்மா!'' அடுத்த கணம் சிட்டாய்ப் பறந்தான் ராமநாராயணன்.

அவனைப் பெற்றவள் குலுங்கிக் குலுங்கி அழுததும், அவனுடைய அண்ணன் ''ஏன்மா அழறே! தடிப் பய கார்த்தாலே வந்து ரேழிக் கதவண்டை காபிக்கு நிப்பான் பாரு'' என்றதும் அவனுக்குத் தெரியாது.

''ராத்திரி வேளையிலே பசி வயித்தோட அனுப்பிச்சிட்டேனே பாவி!'' என்று அந்தப் பெற்றவள் புலம்பியது ராமநாராயணனுடைய அண்ணனின் மனத்தையும் சற்றே உலுப்பியது. செய்வதறியாது அவன் திகைத்து நின்றான். அங்கே மௌனம் நிலவியது.

(தொடரும்)

# ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!

## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக உணவுப்பான நிபுணர்கள் — காட்பரி தயாரித்து அளிப்பது.

**காட்பரிஸ் போர்ன்விடா**

உங்களோடு வளரும் நன்மை




OBM-7538 TM

மலையாளக் கதை:

# எஸ்.கே.பொற்றெக்காட்

தமிழில்: சௌரி

**[சுதந்திர எழுத்தாளராகத் தலை நிமிர்ந்து நிற்கும் திரு பொற்றெக்காட் மலையாள இலக்கியத்தின் நவயுகச்சிற்பி. இவரது பிரபல நாவல் 'ஒரு தேசத்தின்டே கதை' 1964-1973ல் வெளிவந்த தலை சிறந்த இலக்கியம் என்று ஞான பீடப் பரிசுக்கு உரியதாகியது. அந்நாவலின் ஒரு கதைப் பகுதி இது.]**

அவன் சுற்றிச் சுற்றி அந்தத் தெருப் பக்கமே வந்தான். இருப்புக் கொள்ளவில்லை, வீட்டில். இவ்வளவு மாறுதலை —'புரட்சிகரம், பூதாகாரம்' எப்படியும் சொல்லலாம். அடிச்சுவடே மறைந்த இந்த நெருக்கடி மாறுதலை அவனது மனசு, கனிந்த உள்ளம் எதிர்பார்க்கவில்லை. ஊர் — உலகமெல்லாம் உருத்தெரியாமல் மாறி — மறைந்து கொண்டிருக்கும்போது இந்தத் தன் ஊர் மட்டும் மாறாதிருக்கும் என்றுகனவு காண முடியுமா?

பழக்கப்பட்ட அதே இடத்தில் நின்று ஏக்கத்துடன் பார்த்தான். வானத்தில் சிரம் உயர்த்தி, பூதாகாரமாக பெட்ரோல் டாங்க் இருக்கிறது. பெரிய பெரிய எழுத்துக்களில், '10,000 கேலன் சேமிப்பு' என்று அறிவிப்பு!

இதே இடத்தில்தான் அம்முக்குட்டி வாழ்ந்த சிறு வீடு இருந்தது. 'ஆஹா! என் அம்முக்குட்டி! என் முதல் காதல் கனவுக் கன்னி, ஏகாந்த நனவுத் தோழி, கவிதை தந்த ஜீவன்,பேசாமலேயே பேசிக் குலவி வரும் சிந்தனைத் தளிர்...

நினைவுகள் அலை அலையாக வந்து ஸ்ரீதரனைச் சூழ்கின்றன. ஈர்க்கின்றன

இதே பெட்ரோல் டாங்க் இருக்கும் இடத்தில் பசுமையான சூழலில் அம்முக்குட்டியின் சிறு வீடு. முக்கோண வெளிப்பரப்பில் நிறைய மரங்கள், செடிகள். சிறுசிறுக்கும் உயிரியக்கம். அக்கம் பக்கத்திலும் வீடு, தோட்டம், வீடு, தோட்டம்... இப்போது எல்லாம் சுவடு தெரியாமல் அழிக்கப்பட்டு விட்டன. வேர்வரை கெல்லி நாசமாக்கியிருப்பார்கள். பூத்துக் குலுங்கும் மலர்ச் செடிகள் மண்டியிருந்த இடத்தில் கற்சுவர். அதைச் சார்ந்து புதுரக மரம், பெரிய நீண்ட இலைகள், சிறிய சிவப்புப் பூக்கள்.

ஸ்ரீதரனுக்கு வியர்த்தது. நீரிட்ட விழிகளில் அம்முக்குட்டியின் மூக்குத்தியில் பதித்திருந்த சிவப்புக்கல் துலங்கவே, மலங்க மலங்கப் பார்த்துக் கொண்டிருந்தான்.

முப்பத்தைந்து வருடங்கள் ஆகிவிட்டன. ஸ்ரீதரன் இங்கிருந்து போனவன், இப்போதான் திரும்பி வந்திருக்கிறான். பெரும் போர்களுக்குப் பிறகு, பேரழிவுகளின் பின் ஏற்படும் மாறுதல்கள் போல், எல்லா வித்தியாசங்களுமே 'ஆயாசப்படுத்துகின்றன. மனம் ஏங்குகிறது. மாறி மாறி ஏக்கம்— தாக்கம்.

ஸ்ரீதரனுக்குக் கவிதை புனையத் தூண்டுதலாக,—ஊக்க சக்தியாகப் புகுந்தவள் அம்முக்குட்டிதான். வாழ்ந்திருந்தபோது ஆரம்பித்து வைத்தவள், நினைவுக் கனவான பின்னும் தொடர்ந்து ஊக்கி வருகிறாள்.

அந்த மாலை வேளை இப்போதும் பசுமையாக நினைவிருக்கிறது. அவளுடைய தம்பி சிறு அழகிய நோட்டுப் புத்தகத்தை ஸ்ரீதரனிடம் கொண்டு வந்து கொடுத்து. ''அக்கா இதை உங்களிடம் யாருக்கும் தெரியாமல், தனிமையில் கொடுக்கச் சொன்னாள்.''

ஊரை விட்டு மேல் படிப்புக்கு வெளியூர் போய்,மூன்று வருடங்களுக்குப்பிறகு திரும்பி வந்தபோது அம்முக்குட்டியைச் சந்திக்கலாம் என்கிற நப்பாசை விஞுவிஞுத்துக் கொண்டிருந்த காலத்தில் இப்படியொரு அறிமுகம்.

''இப்போ எந்தப் பள்ளிக்கூடத்தில் வேலை பார்க்கிறாள் உன் அக்கா?'' — மூன்று வருடங்களுக்கு முன்பு சந்தித்த — புயலும் மழையும் பாதித்த அந்த அந்திப் போது நினைவுக்கு வந்து அலைக்கழித்தது. உற்சாக உத்வேகத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொள்ளவேண்டியிருந்தது.

அவள் தம்பி தயங்கி நின்றான்; கண்கள் குபுக்கென்று பொங்கி நிரம்பின. தழுதழுப்புடன், ''அம்முக்குட்டி அக்கா காலமாயிட்டாள்'' என்றான்.

''என்ன? இல்லையா.... எப்படி?'' ஸ்ரீதரன் இடிந்து போனான்.

''இப்போதுதான் ஒரு வாரமாச்சு. டி.பி. வந்து சிரமப்பட்டாள்.போய்ச் சேர்ந்தாள்.'' சிறுவன் வயதுக்கு மீறின பரிபக்குவத்துடன் சூனியத்தைப் பார்த்துக் கொண்டு முணு முணுத்தான்.

அன்றிரவு முழுவதும் ஸ்ரீதரன் அவளது கவிதைகளைத்தான் திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டிருந்தான். கடைசிக் கவிதையைப் படித்து முடித்ததும், முதல் கவிதையைத் தொடங்குவான். படிக்கப் படிக்கப் புதிதாகத் தோன்றியது. நவ நவமான சிந்தனைகள் குமிழியிட்டன. தனக்குள் கவியின் வேட்கை புதைந்திருப்பது கண்டு அதிசயித்தான். எளிய, இயல்பான கவிதைகள். தலைப்பில்லை. தெளிவாகப் புலப்படுத்தும் பிரேம பாசத்தில், காதல் துன்பத்தில் தோய்ந்த கவி வரிகள், உள்ளத்தின் நுட்பமான, இனிய, தூய, அசைவுகள் வீணையின் நாத லஹரிகள் போல ஒலித்தன. எதிரொலித்து, தொடர் ஒலிகளை எழுப்பிக் கவிதைக் கனவுகளாகக் காட்சிகளைப் படைத்துக்கொண்டிருந்தன.

'அம்முக்குட்டியை முதல் முறை எங்கே பார்த்தேன்?'

ஆம். அன்றொரு நாள் சாயங்காலத்தில் வீடு திரும்பும்போது. இடி மழை பிரளயமாகத் தொடங்கிய தருணத்தில். கல்லூரிப் படிப்பு முடித்து. முனிசிபல் லைப்ரரியிலிருந்து புத்தகங்களைத் துணையாகக் கொண்டிருந்த காலம். மாலைப் போதில் கைநிறையப் புத்தகங்களுடன் வீடு திரும்பும் போது. இடி. மழை பிரளயமாடத் தொடங்கியது. ரயில்வே லைனை யொட்டிய மைதானத்தில் அகப்பட்டுக் கொண்டான். மழை வலுத்தது. எதிரே ஒரு பெண் பூரா நனைந்து. நடக்க முடியாமல். சேலை கால்களை ஒட்டிப் பிடிக்கச் சிரமப்பட்டு நடந்து கொண்டிருந்தாள். மார்புடன் அணைத்திருந்த புத்தகக்கட்டு. மறு கையில் சிறு குடை. சூறாவளிக் காற்று திடீரென்று குடையைச் சேதப் படுத்திப் பிடுங்கிக் கொண்டது. பட்டம் போல் தறிகெட்டு அலைந்து. நிலக்கரிக் குவித்திருந்த இடத்தில் போய் விழுந்தது.

ஸ்ரீதரன் ஓடிப்போய்ச் சிதைந்த குடையை எடுத்து வந்தான். நாலைந்து கம்பிகள் வளைந்து தொடர்பற்றுப் போயிருந்தன. தன்னுடைய புதுக் குடையை அந்தப் பெண்ணிடம் கொடுத்து. ''இதை எடுத்துக் கொண்டு போ! மழையில் நனைய வேண்டாம்'' என்றான்.

# கவிதைக் கனவுகள்



இளம் பெண் தயங்கி நின்றாள். ஸ்ரீதரனை ஏறிட்டுப் பார்த்தான். அவன் கை குடையுடன் நெருங்கி வந்தது. வாங்கிக் கொண்டாள். ஏதோ பேச விரும்பியவள். குளிர் நடுக்கமும். தயக்கமுமாக மௌனமாக நின்றாள். ஸ்ரீதரன் குறிப்பறிந்து. ''எனக்கொண்ணும் அசௌகரியமில்லே. நாளைக்கு

இதே நேரத்தில் இங்கேயே வந்து வாங்கிக்கிறேன். உன்னுடைய குடையைச் சரிப்படுத்தி வைக்கிறேன்'' என்றான்.

''நன்றி'' முணு முணுத்து, பரிவுடன் நோக்கி, இலேசாக முறுவலித்த பின், வேகமாக நடந்தாள்.

ஸ்ரீதரன் அவளை அதற்கு முன்பு அந்த ஊரில் பார்த்ததில்லை. புதிதாகக் கிராமத்திலிருந்து அங்கு உறவினர் வீட்டுக்கு வந்திருக்கிறாள் போலிருக்கிறது. இவ்வளவு அழகு இத்தனை கம்பீரப் பொலிவு இதுகாறும் காணக் கிடைத்ததில்லை. மாந்தளிர் போல் அவள் மேனி. செவ்வொளி படர்ந்த உதடுகள். தாமரை இதழ் போன்ற விசாலமான, குமிழ்ந்த கண்கள், விழிகளில் இலேசான பழுப்பு நிறம். வெப்புக்கல் மூக்குத்தி: காதுகளில் பாந்தமான சிறு தோடுகள், கால்களுக்குச் சிலுசிலுக்கும் கொலுசுகள். 'குலமகள் கிராம சுந்தரிக்கு' உத்தம உதாரணம். மார் கொள்ளாத, கைகளுக்கு அடங்காத புத்தகங்கள் — நோட்டுக்கள், ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் படிக்கிறாள் போலிருக்கிறது. அங்குதான் இவ்வளவு கட்டுக் கட்டான புத்தகங்களைத் தூக்க வைப்பார்கள்.

மறு நாள்காலையில் கல்லூரிக்குப் போகும் நேரம் பார்த்து ஸ்ரீதரன் அந்த மைதானத்துக்கு வந்தான். அந்தப் பெண் தொலைவில் வருவது தெரிந்தது. மாலையில் சந்திக்க வேண்டியவர்கள் காலையிலேயே சந்திக்கலாயிற்று. குடைகள் கைமாறின. இருவரும் மௌனமாக நடந்தார்கள்.

''உன் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?'' — ஸ்ரீதரன் தயங்கிக் கொண்டே கேட்டான்.

''அம்முக்குட்டி.''

''மச்சார்ஸ் டிரெயினிங் காலேஜிலே படிக்கிறியா?''

மாமா: ஏண்டா! இந்த வருஷம் நீ பாஸா? பெயிலா?
பையன்: போன வருஷம் மாதிரிதான் மாமா!
மாமா: போன வருஷம் எப்படி?
பையன்: அதுக்கு முந்தினவருஷம் மாதிரி!''
மாமா: அந்த வருஷம் எப்படி?
பையன்: இந்த வருஷம் போலத்தான்!
—தி. கருப்பசாமி



''அதே'' மிக மெல்லச் சொல்லிக்கொண்டு தலையசைத்தாள்.

''இங்கே எங்கே இருக்கிறே?''

தங்கியிருக்கிற இடத்தை — வீட்டைக் குறிப்பிட்டாள். தெரிந்த இடம்தான்.

''அவர்களுக்கு என்ன வேண்டும் நீ?''

''அவருக்கு மச்சினி. படிக்க வந்து தங்கியிருக்கிறேன்.''

இதற்கு மேல் அன்று பேசவில்லை. நன்றாக நினைவிருக்கிறது. இதற்குப் பிறகு அவளைச் சந்தித்துப் பேசவே யில்லை. பல அலுவல்கள். அவன் காலை-மாலை நேரங்களில் அந்தப் பக்கம் வரவேண்டியிருக்கவில்லை. சில மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் அந்த வீட்டுப் பக்கமாகப் போகும்போது அவளைப் பார்த்தான். கண்கள்தாம் கூடிப் பேசிப் பிரிந்தன. மற்றொரு நாள் தெருவில் எதிர் எதிரே சந்திப்பு. அப்போதும் பார்வைப் பரிமாற்றம் தான். அந்தக் கண்களுக்குத்தான் எவ்வளவு மொழி வளம், கருத்துப் பொலிவு. கனிவான இனிமை!....

ஸ்ரீதரனுக்கு இன்று நினைக்கும்போதும், அன்றைய தன்னிலை — கோழைத்தனமோ, கூச்சமோ, தயக்கமோ — கழிவிரக்கமூட்டுவது.

பிறகு பல அலுவல்கள், வாய்ப்புக்கள்; இருவருமே ஒருவரை யொருவர் மறந்து, தத்தம் வாழ்வில் இழைய வேண்டிய இடைவெளிகள். இப்படி மூன்று வருடங்கள் கடந்து போன பின், ஊருக்கு வந்திருக்கும் போது, சொல்லி வைத்தாற்போல் அம்முக்குட்டியின் இனிய நினைவுகள் சூழ்ந்து கொண்ட தருணத்தில் அவள் தம்பி கவிதைத் தொகுப்பை அன்பளிப்பாகத் தந்து விட்டுப் போக வந்திருக்கிறான்.

அம்முக்குட்டி ஏன் அந்தப் பூமிக்கு வந்தாள்? கைகள் கொள்ளாமல் புத்தகங்களை அள்ளி அணைத்துக் கொண்டு டிரெயினிங் காலேஜ் போய் வரவா? தன்னுள் தேங்கிக் கிடந்த ஏக்கம், துக்கம், தாபம், கனவு சகலத்தையும், கவிதைகளாக வடித்து, தனிமையினில் கண்ணீர்வடித்துவிட்டுப் போகவா? அவள் நினைவில் துலங்கும்போதெல்லாம் ஸ்ரீதரன் எனும் இளங் கவிஞன் நெஞ்சம் கசிந்துருகி, கண்ணீர் மல்க, துன்பத்தில் லயிக்கவா?

இந்த உலகில் அவள் பௌதிகமாக இல்லை. அவள் எங்கு எவ்வடிவில் இருந்தாலும், சரி, அவளுக்காகஸ்ரீதரன்எண்ணற்ற கவிதைகளைப் படைத்து அர்ப்பணித்து வந்திருக்கிறான். அம்முக்குட்டி எதிரே அங்க லாவண்யத்துடன் மேனி நடை வளர்க்க, இருக்கவில்லை. இருக்க வேண்டியதுமில்லை. அவன் என்றுமே அவனுள் காமுகக் கவர்ச்சியைக் கொர்ந்தியதில்லை. உன்னதமான கவிதைப் பொலிவு, கவிதை யினிமை அவள் அளித்த பரிசுகள். அவனது அந்தரங்கத்தில் தூய பிரேமையின் சாசுவத அநுபூதி பரவியிருக்கிறது.

இப்போது பார்க்கிறான், அந்தப் பொன் மேனிப் பறவை, சிறகடித்துத் திரிந்து எழில் கூட்டிய இந்த இடத்தை. அந்த இடத்தில் இன்று எதிரே காட்சி தருகிறது பத்தாயிரம் காலன் பெட்ரோல் பிடிக்கும் பூதாரகாரமான டாங்க்.

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ். எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது. வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது. பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்




**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது - உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GKDE PS.7 TM

# ஓவியம் வரையும் டபுள் கிராஜுவேட்!

முதுநிலைப் பட்டப் படிப்பில் சிறப்பாகத் தேர்ச்சி பெற்ற நான் அறிந்த மொழிகள் இரண்டு. ஒன்று தாய் மொழி தமிழ், மற்றது ஆங்கிலம்.

புள்ளியியலிலும் மேல்நிலைப் படிப்பு தேர்ச்சி உண்டு.

இரண்டு வருடங்கள் வேலையில்லாமல் உருண்டுள்ளன. இன்னும் எவ்வளவோ?

ஊரிகல் மற்றும் அகௌண்டன்ஸி வேலை வாய்ப்புக்களில் நாட்டம் உள்ளவன். வயது இருபத்தாறு. ஓவியத்தில் அதிகம் நாட்டம் உள்ளவன்.



ஓவியத்தில் ஈடுபட்டுக் கடந்த இரண்டு வருடங்களாக எனது பொன்னான நேரத்தை அழகாகப் போக்கி வருகிறேன்.

பத்திரிகைகளில் வரும் ஓவியங்களை வரைந்து நானாகக் கற்றுக் கொண்டதுதான் என் ஓவியத் திறமை.

துணியில்வரையும்(Fabric painting) கலையும் அறிந்த நான் அவ்வகையில் ஒருசில பரிசுகளும் பெற்றுள்ளேன். குறிப்பிடத்தக்கது கேமெலின் நிறுவனத்தாரிடமிருந்து பெற்ற ரொக்கப் பரிசு. பணத்தை விட கேமெலின் நிறுவனப் பரிசு என்பதில் பெருமகிழ்ச்சி யடைகிறேன்.

டென்மார்க் நாட்டு உதவியுடன் கூட ஓங்கி நிற்கும் உயர்நிலைப் பள்ளி யொன்றில் பள்ளி இறுதி வகுப்பு முடித்தேன். கல்வியகம் சென்று கல்வி கற்க இயலாத நிலையில் என் உடல்நிலை இருந்ததால் 'புறவிடு தூது' கல்வி மூலம் பொருளியலில் முதுநிலைப் பட்டம் வரையில் பயின்றேன்.

ஓவியத்தை அடிப்படையாகக் கொண்டு வேலை வாய்ப்புக் கிடைத்தால் விரும்பி ஏற்பேன். கிட்டுமா?

உறுமீன் வருமளவு வாடியிருக்கப் பழகி விட்டேன். முயற்சி திருவினையாக்கும் என்ற நம்பிக்கையில் முயன்று வருகிறேன்.

பெயர்: ம. பாலசந்தர்

வயது: 26

படிப்புத் தகுதிகள்: M.A. எகனமிக்ஸ் and ஸ்டாடிஸ்டிக்ஸ் மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் தபால் மூலம் பயின்று 1979ல் பட்டம் பெற்றேன். அரசினர் உதவிப்பணம் கொண்டு பயின்றேன், தற்போது I. C. W. A. படிப்பு தபால் மூலம் படிக்க அக் கல்வியகத்தில் சேர்ந்துள்ளேன்.

எதிர்பார்ப்பு: நான் உடல் ஊனமுற்றவன். எனவே என் உடல் நிலைக்கேற்ப ஒரு வேலை வாய்ப்பை எதிர்பார்க்கிறேன்.

விலாசம்: ஃப்ளாட் நெ. 10 பில்டிங் நெ. 3
விநாயக்பவன், கோல்பாட் ரோடு, (Kolbad)
தானே - 400 601

# மாயத்தால் வைத்தோம் மறைத்து

கீரன்

சிவன் செம்மேனிப் பெருமான். பாம்புகள் அவனுக்கு அணிகலன். சடையில் பிறையைச் சூடிப் பன்றிக் கொம்பை மார்பில் அணிந்தவன். நெருப்பையும் மானையும் கையில் ஏந்தியவன். புலித் தோலையும் யானைத் தோலையும் போர்த்தியவன். இடுகாட்டில் பூதங்கள் காண நடமாடுகிறவன். இங்ஙனமாகத் தோற்றம் காட்டி ஆட்கொள்ளும் பரம கருணையுடையவன் இறைவன். அறிவையும் காட்சியையும் கடந்தவன் இறைவன் எனினும் இத்தரு தோற்றத்தில் அவனை வணங்குவார்க்கு அவன் எளியனாகிறான்.

அன்பு மிகுதியாகி விட்டால் உரிமை மிகுதியாவது இயற்கை. இறைவன் மேல் பக்தி அதிகமாகி விட்டால் உரிமை பற்றி இறைவனைக் கிண்டலும் கேலியும் செய்வதுண்டு. அதற்கு இலக்கியத்தில் ''அசதியாடல்'' என்று பெயர். அசதியாடலில் ஆழமான பக்தியைக் காணலாம்.

''இறைவா! நீ உன் திருவடியில் வீரக்கழல் அணிந்திருப்பதைப் பார்த்தேன். உண்மைதான்; மிகுந்த வீரமுடையார்தான் கழல் அணியலாம். உன்னிடம் அந்த வீரம் இருக்கிறது. உன் வீரத்தைக் கண்டுதானே, பாம்பும், சந்திரனும், புலியும், மானும் பகை ஒழிந்து, உன்னிடத்து ஒடுங்கியிருக்கின்றன.''

''நீ தலையில் பிறை ஒன்றைச் சூடியுள்ளாய்! உனக்குத் தேவியர் இருவர். அதனுள் அப்பிறைக்கு உரிமையுடையவர், கங்கையா, பார்வதியா?''

''பார்வதியைத் தனித்து இருக்க விடாமல் உன் உடம்பிலேயே வைத்துக் கொண்டிருக்கிறாயே! அவளைப் பிரிய மனமில்லையா? அல்லது அவளுக்குத் தங்கத் தனி இடம் இல்லையா? அல்லது அவள் உன்னைப் பிரிய அஞ்சுகிறாளா?''

''இறைவா! நடனக் காட்சி எல்லோரும் கண்டு மகிழத்தானே? உன் தேவி மாத்திரம் கண்டு மகிழ்வதற்கா? நாங்கள் காண முடியாதபடி நீ நடனமாடுவதால் என்ன பயன்?''

''ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு பொழுதும் உன்னை வணங்க வேண்டும் என்பதை உன் தோற்றமே எங்களுக்குக் காட்டுகிறது. உன் திருமேனி காலை நேரம் போல் சிவந்து தோன்றுகிறது. உன் திருநீறு நண்பகல் போல் ஒளி வீசுகிறது. உன் செஞ்சடை அந்தி வானம் போல் உள்ளது. உன் திருநீலக் கழுத்து இரவை நினைவுபடுத்துகிறது.''

''பெருமானே! எனக்கு ஓர் உண்மை தெரியும். அது என்னவென்றால் உன் சடை இயற்கையாகவே செஞ்சடை அன்று. நீ பார்வதியின் ஊடலைத் தீர்ப்பதற்கு அடிக்கடி அவள் பாதத்தில் வீழ்ந்து அவள் திருவடி சிவப்புச் சம்பந்தத்தால் உன் சடை செஞ்சடையாயிற்று!''

''பெருமானே! உன் கையும் சிவப்பு. நீ ஏந்திய நெருப்பும் சிவப்பு. உன் கை வண்ணத்தால் நெருப்பு சிவப்பாயிற்று? அல்லது நெருப்பின் சிவப்பால் உன் கை சிவந்ததா?''

''இறைவா! நிலம், நீர், காற்று, விண், நெருப்பு என்னும் ஐம்பூதமாகவும் சந்திரன், சூரியன் என்ற சுடர்களாகவும் இயமானனாகவும் இருக்கிறாய்!''

''இறைவா! நீ எப்படி இருந்தால் என்ன? எந்த வடிவில் உன்னை நினைத்தாலும் அந்த வடிவில் அடியவர்க்கு நீ காட்சி தருகிறாய்!''

''எக்கோலத்து எவ்வுருவாய்
எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத்து அவ்வுருவே
ஆகும் இறைவன்.''

''இறைவா! எல்லாம் ஆன பெருமான் நீ! உன் எல்லை காணல் இயலாதது. உன் திருவடிகள் பாதலத்தை அளப்பன; உன் எட்டுத் தோள்கள் எண் திசைகளைக் கடந்தன.''

இங்ஙனமாக எல்லாம் வல்ல இறைவனை நமக்கு உணர்த்துபவர் காரைக்காலம்மையார். அந்த இறைவனை எளிமையாகப் பெறுவதற்கு ஒரு வழியும் சொல்கிறார். அது என்ன? 'அன்பு' அதாவது 'பக்தி' என்ற ஒன்றே அவனை எளிமையாகப் பிடித்து வைக்க வழி.

போர்வையைப் போர்த்து ஒன்றை முழுக்க மூடிவிடுவதைப் போல், 'அன்பு' என்ற போர்வைக்குள் அவனை அடக்கிவிடலாமே! அன்பு இல்லாமல் அறிவு, ஆராய்ச்சித் திறன் இவற்றை வைத்துக்கொண்டு அவனை அடையலாம் என்று கருதுவது நடவாது.

''ஆர்வல்லார் காண அரன்
அவனை அன்பென்னும்
போர்வை அதனாலே
போர்த்தமைத்துச் — சீர்வல்ல
தாயத்தால் நாமும்
தனிநெஞ்சின் உள்அடைத்து
மாயத்தால் வைத்தோம்
மறைத்து.

காரைக்காலில் பிறந்து, புனிதவதி என்ற இயற்பெயர் படைத்து, பிறந்துமொழி பேசத் தொடங்கிய நாள் முதலாய் இறைவன் சிந்தனையிலேயே ஊறி, உடல் சதையைக் கழித்து இறைவனால் ''அம்மையே!'' என்று அழைக்கப்பட்டு மாறுப் பேரருள் புரிந்து வருபவர், அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகிய காரைக்கால் அம்மையார். அவர் ''அற்புதத் திருவந்தாதியில்'' அற்புதமாகப் பாடியிருப்பவை.

# பவர் கட் ஜோக்ஸ்!



- பவர் கட் எனக்குப் பழகிப் போச்சுடா!
- ஆமாண்டா! உன் பெண்டாட்டி இந்த வீட்டிலே காலடி வெச்ச உடனே எல்லாருக்கும் 'பவர் கட்'! உனக்குப் பழகிப் போச்சு! எங்களுக்குப் பழகல்லே!



- என்ன, ஒன் நாட் நைன்!...நைட் டூடி போறியே ஒரு திருட்டுக் கேஸாவும் புடிக்கக் காணுமே?
- பவர் கட் இருட்டுலே ஒண்ணும் புரியலே!



- டேய் தீவட்டி! பரீட்சைக்குப் படிக்காம....
- பவர் கட் இருட்டுலே எப்படிப்படிக்கிறது? தீவட்டி இருந்தாலாவது படிக்கலாம்!



- புல்லாங்குழல் பலமா ஊதாதிங்க. மெழுகுவத்தியும் அணைஞ்சுடப்போகுது!



- டாக்டர்! உங்களை மாதிரி தலையிலே கட்டிக்கிற டார்ச் லைட் எங்கே கிடைக்கும்? சமையல் ரூம்லே விளக்கு அணைஞ்சு போச்சுன்னு இந்த டார்ச்சை தலையிலே கட்டிக்கலாமே!



● உங்களுக் கென்ன, குஷியா மாவாட்டி, சட்னி அரைச்சுத் தள்ளிட நீங்க! பவர்கட் பத்திக் கவலேயே இல்லே! உங்களுக்கு விசிறி என் கை ஒய்ஞ்சு போகுதே!



● நல்லா காதல் சீன்லே கேட் பூடிச்சே! பாட்டரி லேட் கொண்டாந்து டீ. வி. பெட்டி மேலே வெளிச்சம் போட்டா மிச்சத்தையும் பாத்துடுவோம்!



● ஸார்! மல்டி சானல் டீ. வி. ரூப் வாஹினி பார்க்க, ஸ்பெஷல் அன்டினா, பூஸ்டர் எல்லாம் வாங்கி என்ன பிரயோசனம்? ஒரு ஜெனரேட்டர் வாங்கிட்டிங்கன்னா பவர் கட் பத்திக் கவலேயே வேணாம்!



● பவர் கட் இருட்டு நம்ம தொழிலுக்குத் தோதா இருக்கு! தொழிலுக்குப் புதுசு நீ! பயப்படாம என்னைப் போல கொல்லையிலே குதி!

● என்னமோம்மா! என் வீட்டு மருமகனா வந்து உன் கையாலே விளக்கேத்தி வைக்கப் போறே!

● பவர் கட் சமயம் பார்த்து விளக்கேத்த வந்தவன்னு சொல்லி என்னைக் கொடுமைப் படுத்தாதீங்க!



''கொஞ்சம் கூடக் கவலை யில்லே விக்னேஷ்; நம்ம காதல் சமசாரம் வீட்டுக்குத் தெரிந்தாலும் பயமே இல்லே...'' ரமா, பாஸந்தியைச் சுவைத்தபடி சொன்னாள்.

'மைசூர் போண்டா இரண்டு பிளேட்' என்று ஆர்டர் கொடுத்துவிட்டு முழங்கைகளை மேஜை மீது ஊன்றிக் கொண்டு விக்னேஷ் கேட்டான்:

''அதெப்படி நீ அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்றே?''

ரமா ஸ்பூனை வைத்தாள். ''அதுலேதான் ரமாவோட சாமர்த்தியமே அடங்கியிருக்கிறது...'' கர்ச்சீப்பால் உதடுகளைத் துடைத்துக்கொண்டாள்.

''என்ன புதிர் போடறே?''

''விக்னேஷ்... என் அப்பா. அம்மா ரெண்டு பேருமே ரொம்ப ஜாலி டைப். எனக்கு அவங்களோட காதல் விஷயங்கள் தெரிஞ்சு போச்சு'' என்று சொல்லிச் சிரித்தாள்.

''என்ன!'' அதிர்ந்தான்.

''ஆமா... அவங்க ரெண்டு பேருமே காலேஜ்லே படிச்சவங்க. ரெண்டு பேருக்கும் டைரிஎழுதற பழக்கம் உண்டு. போன ஞாயிற்றுக் கிழமை பீரோ பெட்டி எல்லாம் ஒழிச்சு வச்சு, துணி புஸ்தகங்கள் எல்லாவற்றையும் அடுக்கி வைக்கச்சொன்னாங்க. சான்ஸ் கிடைச்சுது. இரண்டு பேரோட டைரியும் கிடைச்சுது... நைஸா அமுக்கிட்டேன்...'' என்று சொல்லிக் கண் சிமிட்டினாள்.

''அட! அப்படியா... அதுதான் உனக்குத் துருப்புச் சீட்டாப் பயன் படப் போறதா?'' போண்டா பிளேட்டை அருகில்இழுத்துக் கொண்டான். சூடாக இருந்தது.

''ஆமா... விக்னேஷ்...நம்ம காதல் சமாசாரத்தை உடைக்கப் போறேன். அது எப்படின்னு சத்தம் போட்டு என்னைத் திட்ட ஆரம்பிச்சு ஏதாவது ரகளை ஆரம்பித்தால்... அவங்க விஷயத்தை எடுத்து விட வேண்டியதுதான்...எப்படி நம்ம ஐடியா?'' போண்டாவை மென்றபடி கேட்டான்.

அவனுடைய செழுமையான கன்னங்களையும், இரட்டைப் பின்னலையும் கண்களால் ஒரு ரவுண்டு பார்த்துவிட்டு, ''குட் லக் ரமா'' என்றான்.

ரமாவுக்கு அதிர்ச்சி. விக்னேஷ் காதல் விஷயத்தை நீர்க் குமிழி போல் பட்டென்று உடைத்தபோது, பளாரென்று அறைதான் அம்மாவிடமிருந்து கிடைத்தது. அப்பா காம்ப் போயிருந்தார். ரமா கன்னத்தை உள்ளங் கையால் அழுத்திக் கொண்டாள்.

சில விநாடிகள் தலை சுற்ற, அப்படியே தரையில் உட்கார்ந்து விட்டாள் ரமா. அவள் தாய் சுசீலாவுக்கும் படபடப்பு.



# டைரியில் சில பக்கங்கள்

''ஏண்டி, வேலைக்குப் போய் ஒரு மாசம் முழுக்க ஆகல்லே.. அதுக்குள்ளே காதலா?''

''இல்லேம்மா. காலேஜ்லே படிக்கச்சே உண்டு.இப்பத்தான் மறுபடியும் விக்னேஷைப் பார்க்க முடிந்தது. தொடர ஆரம்பித் தோம்.'' அழுத்தமாகப் பேசினாள் ரமா. கன்னம் எரிந்தது.

''ஓஹோ... இது ஒண்ணும் திடீர்க்காதல் இல்லே... ரொம்ப நாளா — மாசமா இருக் குன்னு சொல்றயா?...'' சுசீலாவின் தாடைகள் இறுகின. என்ன தைரியம் இந்தப் பெண்ணுக்கு?

''ஏம்மா... அப்பா அடிக்கடி சொல் வாரே, ஒரே நியாயம்தான் எல்லோருக்கும் இல்லையா? காதலிக்கிறது தப்புங்கறயா?'' ரமாவின் வார்த்தைகளில் உறுதி இருந்தது.

''என்னடி புதிர் போடறே?'' சுசீலாவின் குரலில் சற்று இறக்கம். எதைச் சொல்கிறாள் இந்தப் பெண்?

''என்னம்மா பேச்சே காணோம்?... ம்...நீங்களும் காலேஜ்லே படிக்கும் போது காதல்விவகாரத்திலே ஈடுபட்டு... அதை டைரியிலும் எழுதி...'' ரமா வுக்கு அதற்கு மேல் பேசத் தைரிய மில்லை.

சுசீலா நடுங்கி விட்டாள். இவளைப் பீரோ பெட்டிகளை ஒழுங்கு செய்யச் சொன்னது தப்பாய்ப் போயிற்று. பல நிமிஷங்கள் மௌனமாக இருந்தாள்.

''ஏன் ரமா... டைரிகளைப் படித்தாயா... அப்பா, அம்மா — ஏன் மற்றவங்க டைரி யைப் படிக்கிறது தப்புன்னு தோணலியா? கொஞ்சம் கூடப் பண்பாடு இல்லாமல் நீ இப்படிச் செய்யலாமா? சே'' சுசீலா அதட்ட வில்லை. அன்பாகவும் கேட்கவில்லை. ஆனால் அம்மா கேட்டது ரமாவுக்கு உறைத்தது.

''...வந்து என் காதல் விஷயத்தை உடைக்கப் பயமாக இருந்தது. தற்செயலா டைரி கிடைச்சது. உள்ளே இருந்த விஷயம் தைரியத்தைக் கொடுத்தது.''

''ஸ்டுபிட்... அசடு... பைத்தியம்.. எல்லா பட்டமுமே உனக்குத் தகும். டைரி முழுக்



கப் படிச்சயா:'' சுசீலாவின் தாக்குதல் பலமாக இருந்தது.

ரமா திடுக்கிட்டாள். ''என்னம்மா சொல்றே:''

''டைரியிலே சில பக்கங்கள் ஒழிஞ்சு போயிருக்கும். அதுவும் தவிர உங்கப்பா மாதிரி எல்லோருக்குமே பரந்த மனப் பான்மை இருக்கும்னு சொல்ல முடியாது.''

ரமாவுக்குக் குழப்பம்.

''ரமா, டைரி படிச்சயே... எந்தப் பக்க மாவது அவர் பெயரை நானோ, என் பெயரை அவரோ எழுதியிருக்கிறோமா:''

பொட்டில் அடித்த மாதிரி இருந்தது ரமா வுக்கு. ஐயோ சாமி! அப்படியானால்... இவர்கள் காதலர்களாக இருந்து கல்யாணம் செய்து கொண்டவர்கள் இல்லையா?... அட கடவுளே! இந்த டைரியை நம்பி, நான் பிரமாதமாப் பேசிவிட்டேனே...

''ரமா... மற்றவங்க டைரியைப் படிக்கறதே பெரிய தப்பு. அதை ஆதாரமாக வைச்சு, நாம செய்யற காரியத்துக்கு நியாயம் தேடறது அதைவிடப் பெரிய தப்பு. எந்தப் பிரச்னைக்குமே அதைஅதைஅந்தந்தச் சூழ்நிலையை வெச்சுத்தான் முடிவு, தீர்வு கிடைக்கும்... புரிகிறதா? காதலிக்கிறது தப்புன்னு சொல்ல வரல்லே... அதைத் தைரியமாப் பெற்றோர்கிட்டே சொல்லணும். நல்லதுதான். ஆனால் அதுக்குப் பக்கபலமாக மற்றவங்களை உதாரணம் காட்டறது முட்டாள்தனம்.'' என்று சுசீலா நிதானமாய்ப் பேசினாள்.

''அம்மா... என்னை மன்னிச்சுடு''

''அதோ பார் கவரிலே போட்டோ மாட்டியிருக்கே....'' சுட்டிக் காட்டினாள்.

''அது சித்தப்பா... போட்டோ... கடல்ல மூழ்கிப்போயிட்டார்னு சொல்லியே....''

''ஆமா... அவரோட டைரி.... கூடவே இருந்தது அவர் காதலியோட டைரி... இரண்டையும் உங்கப்பா கொடுத்து வச்சிருந்தார்.... தம்பியின் ஞாபகார்த்தமாக. அதுக்குத்தான் உங்கப்பாவின் பரந்த மனப்பான்மைன்னு சொன்னேன்.... புரியறதா?''.

''ஏம்மா... சித்தப்பா.... தற்கொலையா''

''ச்சீ, அசடு. சமுத்திர ஸ்நானம் செய்யறப்போ, யாரோ மூழ்கறப்போ இவர் காப்பாற்றப் போய்...ம்...''சுசீலாவின் கண்கள் பனித்தன.

ரமா, அம்மாவின் அருகில் அமர்ந்தாள். குழைந்தாள். சுசீலா, ''சரி சரி... உன் விஷயத்தை நானே அப்பாவிடம் சொல்றேன். எதுக்கும் அவசரப்படாதே'' என்று சொல்லும்போது 'எதுக்கும்' என்பதில் அழுத்தம் கொடுத்தாள். ரமா சிரித்துக் கொண்டாள்.

சுசீலாவுக்கு நிம்மதியாக இருந்தது. இன்று இரவு கணவர் ராமநாதன் வந்தவுடன் அவருடன் நிறையப் பேச வேண்டும். பாவம் ரமாவிடம் சொன்ன சித்தப்பா சமுத்ர ஸ்நானக் கதையைக் கணவரிடமும் சொல்லி விட வேண்டும்! காதல் சமாசாரத்தை மகளிடம் மறைச்ச கற்பனைக் கதை வேறு!...

சுசீலா சிரித்துக் கொண்டாள்.

---




பிராம்மணக் குடும்பங்களில் நடைபெறும் அன்றாட நிகழ்ச்சிகளின் தொகுப்புக்களை, சுவையான மேடை நாடகங்களாக வழங்கிய 'மெரீனா' பாணியில் கோவை அநுராதா எழுதி இயக்கிய நாடகம் 'அவர்கள் அப்படித்தான்'.

மகனுக்குக் கல்யாணம் செய்து வைத்து, எதிர் வீட்டுப் பெண்ணே மருமகளாக வாய்த்து, எட்டு மணிக்கு எழுந்து, ஆபீசுக்குப் போய், மாலையில் கணவனுடன் வெளியில் போய்.. மாமியாரின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ளச் சந்தர்ப்பங்கள் எத்தனை எத்தனை இல்லை? சின்னச் சின்னப் பொறிகளை ஊதி, ஊதி நகைச் சுவை மூலாம் பூசி நாடகத்தை அமைத்திருக்கிறார் அநுராதா. எழுதி இயக்கியது மட்டுமல்ல, மனைவிக்கு 'அடங்கிய' கணவனாக வந்து சர்மா பாத்திரத்தில் அரங்கைக் கலகலக்க வைக்கிறார். மனைவி ராஜாம்பாளாக வந்து நறுக் நறுக்கென்று வசனம் பேசி, நாட்டுப் பெண்ணையும் நறுக் நறுக்கென்று குட்டாமல் குட்டுகிறார் அனுபவ நடிகை வி. ஆர். திலகம். அம்மாவுக்கும் மனைவி மோகனாவுக்கும் இடையில் மாட்டிக் கொண்டு விழிக்கும் மகன் சுந்தரேசனை வெகு இயற்கையாக நடித்திருக்கிறார் சுந்தரேசன்.

கதை முடிந்தது என்று நினைக்கிற சமயத்தில்இடைவேளைதான் என்றுஅறிவிக்கிறார்கள். ராஜாம்பாள் மறைவுக்குப் பின் சுந்தரேசனுக்குப் பிள்ளை பிறக்க, அவன் பெரியவனாகித் திருமணம் நிகழ, மனைவி மோகனா மாமியார் ஸ்தானம் பெற — சக்கரம் சுழல்கிறது. சரித்திரம் திரும்புகிறது!

தமது செயல்களைப் பார்த்து தாமே நகைத்துக்கொள்கிற மனப் பக்குவம் பிராமணர்களுக்கு இருக்கிறவரை இதுபோல், எத்தனையோ நாடகங்கள் வரக் கூடும். வந்தால்—

பார்த்துச் சிரித்துவிட்டு, நன்றாயிருந்தால் பாராட்டி விட்டுப் போகலாமே! - சாருகேசி

# "மாறுவீர் நியூட்ரமுல் வீரராய்!"
# மா மல்லர்
# தாராசிங் கூறுகிறார்.




திடவுடல் அமைத்திட
தித்திக்க ஒரு சொல்.
தீர்தாரா வாயால்:
நியூட்ரமுல். அமுல்
படைப்பு. அத்தனையும்
சத்து: அமுல் ஆடைப்
பால். அருமையான
மால்ட். இன்றியமையாப்
புரதம். இன்னமுதக்
கோக்கோ.
வைட்டமின்கள். உலோக
தாதுக்கள். ஒகோ சுவை
விருந்து! விலையோ மிக
மலிவு—போர்ன்விடா
பூஸ்ட், மால்டோவா
எதனையும் விட!






குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க
மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த்-388 001

## இருட்டுப் பயல்களுக்குக்

# கொள்ளை அதிர்ஷ்டம்!

### இந்திரா செளந்தர்ராஜன்

"வணக்கங்க சார்!"

குரல் கேட்டு ஏட் பொம்மையா தலையை நிமிர்த்தினார். செம்மாண்டி, செல்வ ராஜ்!

"ஒழுங்கா இருக்கீங்களா?"

—கேட்டுக் கொண்டே அவர்களிடம் கையெழுத்து வாங்க ஆயத்தமானார்.

'இ.பி.கோ . ....செக்ஷன்படியும், ..... செக்ஷன்படியும் குற்றம் சாட்டப்பட்ட செம் மாண்டி (வயது 25) செல்வராஜ் (வயது 23) இருவரும் கன்னம் வைத்துத் திருடுதல், வழிப் பறி நடத்தல் முதலிய அடாத செயல்களில் ஈடுபட்டுச் சமூக நன்மையைப் புறக்கணித் திருப்பது தெளிவுடன் ருசுப்படுத்தாத கார ணத்தால் சந்தேகத்தின் பலனைக்குற்றவாளி எனக் கருதப்படும் செல்வராஜ், செம்மாண் டிக்கு அளித்து விடுதலை தரப்படுகிறது.

'இருப்பினும் குற்றம் சாட்டப்பட்ட நபர்கள் பழம் குற்றவாளிகள்என்னும் காரணத் தாலும், போலீசாரின் சந்தேகத்துக்கு உட் பட்டு விட்டபடியாலும்,அவர்களைஎச்சரிக்கும் விதத்திலும் சமூக நன்மையை உத்தேசித்தும் இவர்கள் வாரம் ஒரு முறை அவர்களின் இருப்பிடத்துக்கு அருகில் உள்ள காவல் நிலையத்தில் தங்களை ஆஜர்ப் படுத்திக் கொள்ளக் கட்டளை யிடுகிறது.'

—முன்னால் நீதிமன்றம் விதித்த தீர்ப்பை வேண்டா வெறுப்புடன் குற்றவாளிக் கூண்டி லிருந்து கொண்டு கேட்டிருந்தபடியாலும் தன் பகுதி காவல் நிலைய அதிகாரி முரட னுக்கு முரடனென்பதாலும் தங்களை ஆஜர்ப் படுத்திக்கொள்ள வந்த இருவரும் காரியம் முடிந்து ஸ்டேஷனுக்கு வெளியே வந்த போது அவர்களுக்குள் விளைந்த முதல் கேள்வியே வினோதமானது.

'இன்றையப் பொழுதை எப்படிக் கழிக் கலாம்?'

என்றைக்கோ நீதி மன்றம் விதித்திருந்த கட்டளையை நிறைவேற்றிவிட்டுக் கசப்போடு போலீஸ் ஸ்டேஷனை விட்டு வெளியே வந்த வர்களை அவள் கவர்ந்திழுத்தாள்.

"பாண்டி, பஞ்சாப்பு, அர்யாணு, உத் திரப் பிரதேச, ராசஸ்தான்.... ஒரு ரூபாய்க்கு ஒரு லாட்டரி மற்றும் அஞ்சு ரூபாய்க்கு ஐம்பத்தியோரு லட்சம். ஓடி வாருங்க. பல லட்சங்களுக்கு அதிபதி யாகுங்க. அள்ளுறது உங்களை பாண்டி, பஞ்சாப்பு, அர்யாணு, உத்தரப்பிரதேச, ராசஸ்தான்....."

—மாநிறம். நல்ல மெல்லிசான தேகம். மார்புப்புறத்தில் உடம்பின் அந்த மெலிசலை மீறியிருந்தது மேடு இரண்டும். ரவிக்கையின் ஆரம்ப ஊக்கு விரிந்திருந்ததால்உள்ளோடிப் படர்ந்திருந்த பிரா வெளுப்பு பட்ட வர்த்தனமாகத் தெரிந்தது. கண்ணில் ஏழை மையின் வறட்சியை மீறிக் கன்னிமையின் துடிப்பு விரவிப் பரவியிருந்தது.

ஒவ்வொன்றோடொன்று ஒட்டாமல் நீள வளர்ச்சி யோடு வாயுப் போர் நிகழ்த்தும் கேசங்களை விரல்களால் நீவி விட்டபடி,கோதிவிட்டபடி, இந்திய மாநிலங்களைத் தன் மண்ணுத் தமிழுக் கேற்ப உச்சரித்து வரிசைப்படுத்திப் பிழைப் புக் குரல் கொடுத்தபடி இருக்கும் அவளை அவர்கள் இருவரும் நெருங்கினர்.

"குட்டி வர்றியா?" — செம்மாண்டி.

"செருப்புப் பிஞ்சிடும்." — அவள்.

"பரவாயில்லே. புதுசு வாங்கித் தந்துடு வோம். கவலைப்படாதே." — செல்வராஜ்.

"போலீஸ் ஸ்டேசன் வாசல்லேயே 'வந்து' கொடுக்கறீங்களா? சத்தினு காத்துல பறந் துடும் உங்க உடம்பு.ஜாக்கிரதை..."-அவள்.

"கடுகா வெடிக்கிறியே, வெளையாட் டுக்குக் கேட்டா. எங்க ஒரு ராசஸ்தான் கொடு பாப்போம்." — செல்வராஜ்.

"மொதல்லே பணத்தை எடு. பொறவு பாப்பம்...."

செல்வராஜ் பாக்கெட்டுக்குள் கையை விட் டான். இரண்டு ரூபாயும் சில்லறைகளும் கைக்கு வந்தன. செம்மாண்டியிடமும் அதே அளவு. இரண்டும் சேர்ந்தபோது ஐந்து நாற்பதாகியது. அவள் உள்ளங்கையை வருடி அவன் அதை வைத்தபோது நாற்பது காசைத் திருப்பிவிட்டு ஒரு லாட்டரியை அவள் அதோடு வைத்தாள்.

இருவரும் சீட்டை வாங்கிக் கொண்டு சில்மிஷச் சிரிப்போடு அப்பால் நகர்ந்தனர்.

"மாப்ளலாட்ரிவிழுந்தாளென்ன பண்றது?"

"லாட்ரி அப்புறம் விழட்டும். குட்டி இப்ப நம்ம வலையிலே விழாமப் போயிட்டாளே!"

சில இலோ அபினியைக் கூலிக்காகக் கடத்தியபோது போலீசார் துரத்தப் போய் எதிர்த்துச் சில பேரைக் குத்துயிராக்கிவிட்டு வில்லாயன் காட்டுக்குள் தேகத்தை அடக்கிக்

கொண்டிருந்தான் செம்மாண்டி. நிதமும் அவன் வயிற்றுப்பாட்டைக் கவனிக்க செல்வ ராஜ் இராப் போதில் உணவுப் பொட்டலத்தோடு கண்காணிக்கும் போலீசை மீறி வில்லாயன் காட்டுக்குப் போய். வரவேண்டியிருந்தது.

போலீஸ் ஸ்டேஷனுக்குள் ஆவல் துள்ள நுழைந்தாள் அந்த லாட்டரி விற்கும் பெண்.

''வணக்கம்அண்ணாச்சி. ஒரு விசயம் தெரியோணும்.'' என்றான்.

''என்ன புள்ளே?'' — என்றார்ஏட் பொம்மையா.

''இங்க வாரம் ஒருக்கத் தவறும வந்துக் கிட்டிருந்தானுங்களே ரெண்டு தடிப் பசங்க! அவங்க இப்ப என்ன ஆனாங்க?''

''உனக்கெதுக்கு அந்த விசயமெல்லாம்?''

''ஐய்யய்யோ... அவனுக ரெண்டு பேரும் என்கிட்ட வாங்குன லாட்டரி சீட்டுக்கு ஐம்பத்தி யொரு லட்சம் பரிசு விழுந்திருக்கு....! எனக்குக் கமிஷன் உண்டு. எங்க ஏஜண்டய்யா தரேன்னுருக்காரு. அது தான் சாரிச்சேன். இவங்களத் தேடிட்டிருக்கோம். இங்க வருவானுகளா?''

ஏட் பொம்மையாவுக்குப் பிரமை அடித்திருந்தது. பேச்சு மூச்சில்லை. கண் முன்னால ஐம்பத்தி ஒரு லட்சமும் ஒத்தைக் காசாய் மலையாட்டம் குவிந்திருந்தது. 'திருட்டுப் பசங்களுக்குக் கொள்ளை அதிர்ஷ்டமா? முறுவா நியாயமா?' கேள்விப் பந்தடித்தது மனம்.

''அண்ணாச்சி சொல்லுங்க. அவங்க வருவாங்களா? அட்ரசு உண்டா?'' — அவள் படபடத்தாள். அதனால் மீண்ட ஏட் பொம்மையா அவளை வியப்புடன் பார்த்து ''அந்தச் சீட்டை அவனுங்கதான் வாங்கினாங்கன்னு உனக்கு எப்படித் தெரியும்?'' சந்தேகத்தைக்கிண்டினார் பொம்மையா

''ராசல்தான் ரகத்துல நான் வித்ததுஒரு சீட்டுத்தான். அதை வாங்குனது அவுகதான். எனக்குச் சோராத் தெரியும். அதுசரி அவுகளுக்குஅட்ரசு உண்டா?''

''உண்டு புள்ளே. ஒருத்தன் வெளியத் தான் இருப்பான். ஒருத்தன்தான் தலை மறைவு. வா, போய்ப் பார்ப்போம். சேதி தெரிஞ்சா மறைஞ்சவனும் வெளிய வரலாம். எத்தினி நாளைக்குத்தான் நான் ஏட்டாவே இருக்கிறது? இது நல்ல சந்தர்ப்பம்தான்.''

ஏட் பொம்மையா அவளோடு செல்வ ராஜைச் சந்திக்கக் கிளம்பினார்.

செல்வராஜ் மக்கடையில் மவை ஊதி ஊதிச் சூப்பிக் கொண்டிருந்தான். தொலைவில் வரும் பொம்மையாவை, அவரின் வேகத்தைப் பார்த்துக் கொஞ்சம் விதிர்த்தான். தயங்கித் தயங்கி நின்றவனைப் புன்னகையோடு நெருங்கினார் பொம்மையா.

''என்னலே, கோடீஸ்வர ராஜி முழிக்கிறீக!''

செல்வராஜ் விழித்தான்.

''யோவ், யோவ்...''-அவன் வேகமாகப் பேசப் பார்த்துப் பொம்மையாவால் தடைப் பட்டு ஆவல் காட்டாமல் மன்றாடினான். செல்வ ராஜுக்குச் சுழன்றது. விவரம் தெளிவடைந்த போது வலக்கையோடு இடக் கையைப் போட்டுக் குத்திப் பிசைந்து கொண்டான். 'சீட்டு செம்மாண்டிவசத்துல்ல இருக்கு....' மனசில் சொல்லிச் சொல்லிப் புலம்பினான்.

''எலே செம்மாண்டி எங்கிட்டு இருக்கான்? ஜரூரா சொல்லு. அவன் வெளிப் பட்டா ஆறு மாசம் அல்லாங்காட்டு ஒரு வருசம். அதுவுமல்லாக் காட்டு ஜாமீன் பணம். அம்புட்டோட கதை ஓவர். பிற்பாடு நீங்க கோடீசுவரரு. உன் சினேகிதன் எங்கிட்டுல்லா இருக்கான். சத்தியமா உனக்குத் தெரியாம இருக்காது.''

—ஏட் பொம்மையா கருதி கூட்டக் கூட்ட செல்வராஜிடம் மௌனம் கூட ஆரம் பித்தது. ''ஐம்பத்தி ஒரு லட்சம், ஐம்பத்தி ஒரு லட்சம்... காலம் பூராவும் இராப் போதில் பூட்டு உடைத்தாலும் அகப்படாத செல்வம். ஐம் பத்தி ஒரு லட்சம், ஐம் பத்தி ஒரு லட்சம்....



—அவன் சந்தோஷப் பரவசத்தோடு மூளையின் சிந்தனைச் செல்லுகளை வேகமாக்கி விறு விறுப்படைந்தபோது புதிய யுக்தி வெளிச்சமாகியது.

''ஏட்டய்யா சத்யமா அவன் எங்கிட்டுன்னு தெரியாது. சீட்டு என் வசம்தான் இருக்கு. நாள மொறையா செய்ய வேண்டியதைச் செய்வோம். விஷயம் தெரிஞ்சு என்னியச் சந்திக்க வருவான். அப்பப் பாத்துக்குவோம்.''

—புதிய திட்ட அடிப்படையில் பேசினான். ''ரீல் உடாதடா. அவன் இருக்கிற இடம் உனக்குத்தெரியும்.....''-பொம்மையா நம்ப மறுத்துச் சினந்தார்.

''ஐய்யோ... இனிமேட்டு நாங்க ரீல் உட்டு யாருக்கு என்ன ஆவணும்? நம்புங்க ஏட்டையா....''

-பொம்மையயோவேறு வழியின்றிநம்பினார்.

''சரி உன்னிய நம்பறேன். பேப்பர்க்காரங்க, பேங்குக்காரங்க, ஏஜெண்டு இவங்க கவர்றதுக்கு முந்தி சீட்டை எனக்குக் காமி. இந்த ஐஸ்வர்ய பாக்கியத்தை ஒரு வட்டம் பாத்துக்குறேன்.''

—வசமாக மாட்டிக் கொண்ட மாதிரி விழித்தான் செல்வராஜ். இருந்தாலும் சரியில்லை.

''எப்பவும், லாட்டரி, ரூபாவையெல்லாம் கைய்யில வச்சுத் திரிய மாட்டேன். அது பத்ரமா இருக்கு. நாளைக்கு நல்ல நாளு. அப்பத்தான் வெளியே எடுப்பேன்.''

''யோவ், யோவ் எனக்குச் சீலை வாங்கிக் குடுப்பியா?'' — பக்கமாய் அவள் விழி விரிய கேட்க ''சின்ன ஊடே கட்டித் தரேண்டி. வெல்லம்...'' என இவன் சுபாவமாய்ப் பதில் சொல்ல ''ச்சீய்ய்...'' — என்றாள்.

ஒரு சின்ன மொபட்டின் மேலேறித்திரிந்து கொண்டிருந்த ஏஜெண்டு, கைவசம் மாலையோடு செல்வராஜைப் பார்த்துவிட்டு வேக வேகமானார். எலுமிச்சம் பழமெல்லாம் தந்து மார்போடு—மார்பானார்.

''அண்ணாச்சி ஒரு அமுத்து அமுத்திட்டே இனி நீ களவாணி இல்லே. பெரிய மனுஷன். இந்த பட்டி தொட்டிப் பக்கமெல்லாம் மெச்சப் போற 'பெரிசு' நீ.

-பெரிய்ய்ய உற்சாகமானான்செல்வராஜ். மனசுக்குள் அனைத்தையும் மீறி வழுக்கிக் கொண்டிருந்தான், தன் திட்டத்துக்குள்.

பத்திரிகையாளர் ''சீட்டைக் காட்ட நீங்களா? போட்டோ எடுத்துக்கரோம்.'' என்றபோது. ''நாளைக்குத்தான் வெளியே எடுப்பேன்'' என்றான் செல்வராஜ்.

''ஏன்?''

''நாளைக்குத்தான் நல்ல நாள்.''

எல்லோருக்கும் துளி ஏமாற்றம். வெளிக் காட்டாமல் 'சௌகர்யம் போல் செய்யுங் கண்ணே' என்று பொய்யாய் மாறி வழிந்தனர்.

செல்வராஜ் அங்கிருந்து அகலக் காலெடுத்தான். பின்னாலேயே பத்துப் பேர் தொடர்ந்தனர்.

பொம்மையா ''அவனைக்குழப்பாது விடுங்கடா. தனியே விடுங்கடா. பணம் வந்துட்டா பக்கமாவந்து கொத்தறதைப் பாரு.'' என்று தடியைச் சுழற்றாமல் வார்த்தையை மாத்திரம் சுழற்றிக் கத்திய சத்தலுக்குப் பலன் கிட்டியது.

செல்வராஜ் தனித்துப் பிரிந்தான்.

**வி**ல்லாயன் காட்டின் இருண்ட புதரின் சொர சொரப்பான பாறைகள் செம்மாண்



## ஆன்றோர் வாக்கு

□ இந்தக் காலத்தில் கல்யாணம் ஆகுமா என்று அநேக பெண்கள் தவிக்கிறார்கள். இதற்கு அநேக காரணம் உண்டு. இருந்தாலும் இப்படிக் கஷ்டப்படுகிற குழந்தைகளுக்குக் கல்யாணத்துக்காக உதவி செய்வது என்று ஏதாவது ஒரு திட்டம் போட்டுக் கொண்டு எல்லோருமாகச்சேர்ந்து ஏதாவது ஒரு பாங்க் ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்தால் நிரம்ப நன்றாக இருக்கும். பெரியபெரிய தர்மவான்களுடைய நினைவாக நம் தலைமுறையிலும் ஏதாவது செய்தோம் என்று ஆகும்.

—காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

□ எனக்கிருந்த தமிழ்ப் பசி அதிகம். மற்ற இடங்களில் நான் பாடம் கேட்டபோது, அவர்கள் கற்பித்த பாடம் யானைப் பசிக்குச் சோளப் பொரி போல இருந்தது. மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் வந்தேன். என்ன ஆச்சரியம்! எனக்குப் பெரிய விருந்து. தமிழ் விருந்து கிடைத்தது. என் பசிக்கு ஏற்ற உணவு, சில சமயங்களில் அதற்கு மிஞ்சிக்கூடக் கிடைக்கும்.

டாக்டர் உ. வே. சாமிநாதய்யர்

□ கற்பனை வளம் அறிவை விட அதிமுக்கியமானது.

□ மதம் இல்லாதவிஞ்ஞானம் முடமானது; விஞ்ஞானமில்லாத மதம் குருடு!

—ஆல்பர்ட் ஐன்ஸ்டைன்

□ வாழ்க்கைப் போராட்டமே வாழ்க்கையின் ஆனந்தம். -லியோனிட் ஆண்ட்ரயேவ்

டியை எரிச்சல் படுத்தின. கடுப்போடு இருளோடு இருளாய்க் கிடந்தவனின் அடிவயிறு 'கடா புடா' என்றது. வாரக் கணக்காய் இருள் உறவு கொண்டிருந்த எரிச்சலும், செத்துப்போன நாக்கும், தினம் தினம் புதுசு புதுசாய் அனுபவிக்கும் உடம்பும் மனசும் கொதி மணல் மேல் விழுந்த தவளையாய் எம்பிக் குதித்தன.

ஒரு நலிந்த பெட்டிக் கடை முன்னால் அகோரமாய் அவன் வந்து நின்றது கண்டு அந்தப் பெட்டிக் கடைக் கிழவர் கவலையானார்.

''கெழவா ஒரு பாக்கெட் சிகரெட்டும் வத்திப் பெட்டியும் கொடு...'' என்ற கேள்வியோடு பக்கமாய்த்தொங்கும் பழக் குலையைப் பாய்ந்து பிடுங்கினான். தோலை விட்டெறிந்த போது அது காகிதம் ஒன்றின் மேல் விழுந்து சப்தித்து அவன் கவனத்தைத் தன் பக்கம் திருப்பியது. எதேச்சையாகத் திரும்பியவன் தோளுக்குப் பக்கமாய் செல்வராஜைப் பார்த்துவிட்டு வியப்பால் நெருங்கினான்.

அன்றைய மாலைத் தினசரி அவனைக் கோடீஸ்வரனுக்கியிருந்தது.செம்மாண்டிக்குப் பதறியது. முழு விவரமும் படித்து முக வானபோது கொஞ்சம் சந்தோஷம், கொஞ்சம் பதைப்பு.

மளாரென வேட்டியைத் தூக்கி உள்ளாடைக்குள் கையை விட்டுக் கசங்கிய நிலையில் கிடந்த லாட்டரியை வெளியே எடுத்து நம்பரை ஒப்பிட்டுப் பார்த்தான். அடுத்த விநாடி பெரிதாய் எகிறிக் குதித்தான். காச்சு மூச்சு என்று கத்தினான். அவனுள் சந்தோஷக் காவேரி ஓடியது.

அதே வேகத்தில் அவனுள்ளும் மூளைச் செல்லுகளில் விபரீதக் கேள்வி ஒன்று விசுவரூபமெடுத்தது.

''ஐம்பத்தி ஒரு லட்சத்தில் பாதி மட்டும் தானு எனக்கு? மீதி... செல்வராஜே இல்லாவிட்டால்? இல்லாவிட்டால்...?

புதிய முயற்சிக்கு அவன் துணிந்தான்.

அழகோடு வளைந்து, வானத்துச் சூரியனை அப்படியே தன் உடம்பின் மேல் காட்டிய பளபளப்பான கட்டாரிக் கத்தியைப் பதுவிசாக இடுப்போடு இறுக்கிக் கொண்டான் செல்வராஜ். காட்டுக்குள் புகுந்தான்.

குறுகிய வழிகளைக் கடந்து இருளில் முன்னேறி மெல்லிய வெளிச்சம் ஒரு பாறையின் இடுக்கு வழியே ஒழுகும் இடம் வந்து விழியை விரட்டி உள்ளோட்டியபோது செம்மாண்டி குறுகிய குகையின் தரைப் பரப்பில் மண்ணைத் தோண்டிக் கொண்டிருப்பதுதெரிந்தது.

''எதற்கு?'' புரியாது நின்ற செல்வராஜ் சில விநாடி கழித்து 'ரொம்பவும் வசதியாகப் போயிற்று' என்று தனக்குள்சொல்லிக் கொண்டான்.

தோண்டி எடுத்த மண்ணைப் பக்கமாய்க் குவிக்கக் கூட இடமில்லாத நிலையில் மண் கட்டிகள் சரியச் சரிய அவைகளை ஓரமாய்க் கூம்பாய் குவித்தபடி கைவசம் உள்ள மண் வெட்டி போன்ற இரும்பு ஆயுதத்தை செம்மாண்டி நிலத்தை நோக்கிக் கொத்த உயர்த்தியபோது செல்வராஜ் ''செம்மாண்டி''




## லண்டனில் ஒரு 'கல்கி'

லண்டனில் வசிக்கிறார் திருமதி பாரதி பாலகிருஷ்ணன். நமது பண்பாடுகளை மறவாமல் ஒவ்வொரு பண்டிகையையும்கொண்டாடுவார். என்ன குளிரானுலும் பேண்ட் போடாமல் புடவைதான் உடுத்துவார். ''லண்டன்வாசிகள் புடவைக்குத் தரும் மதிப்பும் மரியாதையும் அலாதி'' என்கிறார்.

ஸ்ரீராம நவமியின்போது ஆங்கிலேய நண்பர்களுக்கெல்லாம் பானகம்விநியோகித்தார். அவ்வளவுதான், அதிலிருந்து எப்போது இவர் வீட்டுக்கு வந்தாலும் சரி, ''அந்தக் 'கலர் வாட்டர்' கொடுங்கள்'' என்கிறார்களாம்!

புதிதாகக் கட்டப்பட்டு வரும் லண்டன் முருகன் கோயிலுக்குப் பலவித உதவிகள் செய்கிறார். தமக்குத் தெரிந்த தேவாரம், திருப்புகழ் முதலியவற்றை லண்டன் வாழ் தமிழ்க் குழந்தைகளுக்குச் சொல்லித் தருகிறார்.

கணவர் டாக்டர் பாலகிருஷ்ணன் கல்கி நேயர்களுக்கு அறிமுகமானவர் (உரையாடல் கட்டுரை: வலி இல்லாத பிரசவம்.)

உத்ரா லண்டன் போயிருந்தபோது அவர் பல இடங்களைப் பார்க்க அழைத்துப்போய் உதவினார் திருமதி பாரதி. அப்போது மிகப் பிரபலமான டிரஃபால்கர் ஸ்குயர் பகுதியில் அவரை 'கிளிக்' செய்தார் உத்ரா. அந்த 'கிளிக்' இந்த இதழின் மேலட்டைப் படமாகிறது.

-சீக்கி

என்றான். 'சீட்டு கைக்கு வரும்வரையில் மூச்சு விடக் கூடாது.' 'என்ற எச்சரிக்கையோடு எதிர் நிற்கும் செல்வராஜை மெலிந்த திகைப்போடு செம்மாண்டி ஒரு விநாடி ஏறிட்டான். மறு விநாடி 'தாமதிக்கக் கூடாது, தாமதிக்கக் கூடாது' என்ற வெறியோடு இரும்பு ஆயுதத்தை செல்வராஜின் பின் மண்டையை நோக்கி வேகத்தோடு சுழற்றினான்.

' 'அம்மாவ்....' — அலறிப் புடைத்துப் பக்கப் பாறை மேல் விழுந்தவனது வாயைச் செம்மாண்டி தனது கரங்களால் பாய்ந்து இறுக்கியபோது அவன் அடிவயிற்றைக் கட்டாரிக் கத்தி கிள்ளிக் கடித்து விசுக்கென்று புகுந்து முதுகுக்கு வெளியே முனையைக் காட்டி முடிந்து நின்றது.

வலி வேதனையோடு மெல்லிய இருளில் தடுமாறிய இருவரும் சவமாய் வெட்டிய குழியில் விழ, ஓரமாய்த் தேங்கி நின்ற மண் குவியல் இருவரையும் மூடிச் சரிந்தது.

# கண்கவர் மலர் தொகுப்பு மோகல் வடிவமைப்பு சேலைகள்

ஆக்ரா, டில்லி, பதேபூர்,
சிக்ரியில் உள்ள மொகலாய
ஞாபகச்சின்னங்களில்
பொறிக்கப்பட்டுள்ள அழகிய
மலர்களே சாராம்சம் ஆகும்.
புத்துணர்ச்சியூட்டும் பழுப்பு,
நீலம், இளஞ்சிவப்பு, மற்றும்
மரகதப் பச்சை நிறங்களில்
கிடைக்கின்றன.

கோ-ஆப்டெக்ஸின் குறிப்பிட்ட
விற்பனை நிலையங்களில்
கிடைக்கின்றன.

**விலை ரூ. 65/- மட்டுமே!**

தேசிய கைத்தறித்
தொகுப்பு

கைத்தறி வளர்ச்சிக் குழுவின்
ஆணையரின் கூட்டுறவுடன்
கோ-ஆப்டெக்ஸ் உருவாக்கியது
மொகல் சேலைகள்.



கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி

ELEGANT



றுநோய்க்கு கோபால்ட் கதிர் சிகிச்சை

# முற்றவிடாதீர்கள்

# புற்றுநோயை!

"**என்** மனைவிக்கு உடம்பு சரியில்லாத போது நான் பல டாக்டர்களிடம் அவளை அழைத்துச் சென்றேன். எல்லோரும் நிபுணர்கள். முதலில் அவளுக்குக் கருப்பை வாயில் ரத்தப் போக்கு இருந்தது. ஒவ்வொரு டாக்டரும் 'கவலைப்பட வேண்டாம்; உங்கள் மனைவி முழுக் குணம் அடைந்து விடுவாள்' என்று உறுதியளித்தனர். ஆனால் ஒன்றும் பயனில்லாமல் போகவே, கடைசியாக நான் கான்ஸர் இன்ஸ்டிட்யூட்டை அணுகினேன். அவளுக்கு வந்திருப்பது லுகேமியா என்னும் ரத்த கேன்ஸர் நோய் என்றும், ஏன் இத்தனை நாள் தாமதித்து வந்தீர்கள் என்றும் என்னைக் கோபித்துக் கொண்டார்கள். பதினைந்து நாள் சிகிச்சைக்குப் பிறகு என் மனைவி இறந்து போனாள். நான் தாயற்ற இரு குழந்தைகளோடு மன நிம்மதி இழந்து வாழ்கிறேன். டாக்டர்கள் ஏன் இப்படி இருக்கிறார்கள்?"

என்று சமீபத்தில் ஆங்கில வாரப் பத்திரிகை ஒன்றில் ஒரு வாசகர் எழுதியிருந்த கடிதத்தைக் குறிப்பிட்டுப் பேட்டியைத் துவக்கினேன். கான்சர் இன்ஸ்டிட்யூட் மருத்துவ இயக்குநர் டாக்டர் சாந்தா அவர்களிடம்.

"இம்மாதிரி தவறாகப் பத்திரிகைகளுக்குக் கடிதம் எழுதி மக்களின் நம்பிக்கையைக் குலைத்து விடுகிறார்கள் சிலர், அறியாமையினால்!" என்று நிதானமாகப் பதிலளித்தார் டாக்டர் சாந்தா. "அவர் மனைவிக்கு வந்தது யூடரஸ் கான்ஸராகவும், லுக்கேமியாவாகவும் எப்படி இருக்க முடியும்? இரண்டும் வேறு வேறு. நோயின் ஆரம்பக் கட்டத்தில் வந்தால் உண்மையில் நோயைக் குணப்படுத்தி விட முடியும். ஒரு சிறு சம்பவம் சொல்கிறேன். ரயில்வேயில் உயர் அதிகாரியாகப் பணியாற்றும் இன்ஜினியர் ஒருவர் நாலைந்து வருடங்களுக்கு முன்பு தனக்கு உடம்பு சரியில்லாத போது அயனாவரத்தில் உள்ள ரயில்வே மருத்துவ மனைக்குப் போனார். அவருக்கு வந்திருப்பது லுக்கேமியா நோய் என்று, சோதனைகளுக்குப் பிறகு அங்கே இருந்த மருத்துவர்கள் கண்டு பிடித்தார்கள். அவரை உடனே எங்களிடம் அனுப்பி வைத்தார்கள். ஆரம்பத்திலேயே இங்கே வந்ததால் தகுந்த சிகிச்சை மூலம் அவரைப் பூரணமாகக் குணப்படுத்த முடிந்தது. அவர் பழையபடி வேலைக்குச் சேர்ந்து பணியாற்றி வருகிறார். சரியான நேரத்தில் சரியான சிகிச்சை அளித்தால் லுக்கேமியாவைக் குணப்படுத்த முடியும்!

"நாம்தான் நோயின்றி இருக்கிறோமே, நாம் எதற்கு கான்சர் இருக்கிறதா என்று வீணாகப் போய்ப் பரிசோதித்துக் கொள்ள வேண்டும் என்று சிலர் ஆரோக்கியமாக இருக்கும்பொழுது நினைக்கிறார்கள். ஆனால் நோயின் ஆரம்ப காலக் குறிகள் அந்தப் பரிசோதனையில் தெரிந்து விட்டால் வெகு எளிதில் இந்தக் கொடிய நோயைக் குணப்படுத்திவிட முடியும். கான்சர் நோயை உண்டாக்கக் கூடிய குறிப்பிட்ட வகை 'செல்கள்' அதிகமாகக் காணப்படும்போது தக்க மருந்துகளைக் கொடுத்து, ரத்தத்தில் அந்த 'செல்கள்' அதிகமாகக் கலந்து விடாமல் செய்து, ஆரம்பத்திலேயே குணப்படுத்தலாம். இதை முக்கியமாக நீங்கள் அறிய வேண்டும்!"

**ப**ல ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த நமக்கு இன்னமும் மேலை நாட்டில்தான் கான்சருக்குத் தகுந்த சிகிச்சை செய்ய முடியும் என்ற தவறான கருத்து இருக்கிறதைச் சாடினார் டாக்டர் சாந்தா. 'இந்த கான்சர் இன்ஸ்டிடியூட்டில் இல்லாத எந்த வசதியும் திறமையும் அங்கே இருக்கிறது என்று போகிறார்கள்?' என ஆணித்தரமாகக் கேட்கிறார்.

வெளிப்படையான புற்றுநோயின் குறிகள்: சொற சொறப்பான கன்னக் கதுப்புக்கள்–கன்னத்தில் வரும் புற்று நோய்க்கு. விட்டு



அமரர்

# கல்கி

## நினைவுச் சிறுகதைப் போட்டி - 1982

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ. 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. 500 |
| மூன்றாம் பரிசு | ரூ. 500 |

(இரு கதைகளுக்குத்தலா ரூ. 250வீதம்)

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப்பெறும்.

- தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.
- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- முடிவு தேதி ஜூன் 15.
- உறையின்மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளை திரும்பப் பெறப்போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருத்தல் நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் இடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

ஆசிரியர், கல்கி, சென்னை - 600 032.


விட்டு ரத்தப் போக்கும், பிறப்புறுப்பிலிருந்து நீர்க் கசிவும்: யூடரஸ் கான்சருக்கு. மார்பகத்தில் வலியற்ற கட்டி அல்லது தடிப்பு: மார்பகப் புற்று நோய்க்கு. டாக்டர் சாந்தா தெரிவித்த சில கருத்துக்கள்:

1. தாய்ப்பால் கொடுப்பது மார்பகப் புற்று நோய் வராது பாதுகாக்கும் ஒரு தடுப்புப் பணி எனலாம். குழந்தையில்லாத தாய்மார்களுக்கு மார்பகப் புற்று நோய் வரக் கூடுதல் வாய்ப்பு இருக்கிறது. தகுந்த நேரத்தில் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும்.

2. கன்னிகா ஸ்திரீகளுக்கும் பெரும்பாலும் மார்பகப் புற்று நோய் வருகிறது. ஆனால் கருப்பை வாய்ப் புற்று நோய் அவர்களுக்கு வராது. ஏனெனில் உடலுறவு கொள்ளும் பெண்மணிகளுக்கு மட்டுமே யூடரஸ் கான்சர் வருகிறது.

3. கருப்பை வாயில் ஏற்படும் மாறுதலை அறிய 'பேப்ஸ்மியர் டெஸ்ட்' செய்து கொள்ளலாம்.

4. ஒரு குடும்பத்தில் தாயாருக்கும் மூத்த சகோதரிக்கும் யூடரஸிலோ மார்பகத்திலோ புற்று நோய் வந்திருந்தது என்றால், இளைய சகோதரிக்கும் புற்று நோய் வரக் கூடுதல் சாத்தியக் கூறு உண்டு. இவர்கள் தயக்கமின்றிப் பரிசோதனை செய்துகொள்ள வேண்டும்.

5. வயிற்றில் புற்று நோய் — மேலை நாடுகளிலும் ஜப்பானிலும் அதிகம். இதற்குக் காரணம் உட்கொள்ளும் உணவுதான். மேற்கத்திய நாடுகளில் பெரும்பாலும் பாலிஷ் செய்த ரிஃபைன்ட் உணவு வகைகளையே சேர்த்துக் கொள்கிறார்கள். ஜப்பானில் மீன் அதிகம் உண்கிறார்கள். இவை குடலில் தங்கி, சரியான அல்லதுசீரான மலங்கழித்தல் இன்றி, கான்சர் வர வழி இருக்கிறது. நம்மைப் போல் புதுக் காய்கறிகள்; இயற்கையான உணவு வகைகளை அவர்கள் அதிகம் உட்கொள்ளாததால் கோலன் கான்சர் என்ற வயிற்றுப் புற்று நோய் மேலை நாடுகளில் அதிகமாக இருக்கிறது.

— சாருகேசி

ஆசிரியர்: "காக்கையும் நரியும் கதை எழுது என்றால் புஸ்தகத்தில் இல்லாத புது கதையை எழுதி இருக்கிறாயே ஏன்?"

முரளி: "(பத்திரிகை ஆசிரியர் மகன்) ஏற்கனவே புஸ்தகத்தில் வந்த கதைகளைப் பார்த்துக் காப்பியடிச்சு எழுதக் கூடாது. சொந்தமாகக் கற்பனை செய்துதான் கதை எழுதணும்னு எங்க அப்பா சொன்னார் சார்"

-லலிதா செல்லப்பா

# பரிசு பெற்ற கிராமம்!



கிழக்கில் வள்ளியாறும், தெற்கில் அரபிக் கடலும், வடக்கே பெரிய குளம் ஏலா—வாலும் மேற்கே மண்டைக்காடு என்ற திருத்தலத்தாலும் சூழப்பட்ட இயற்கை வனப்பு மிகுந்த அழகான சிற்றூர்தான் எங்கள் மணவாளக்குறிச்சி.

ஏழு சிற்றூர்களை உள்ளடக்கிய இந்தக் கிராமத்தின் மக்கட் தொகை கிட்டத்தட்ட எட்டாயிரம் ஆகும். பதினேழு ஜாதிப் பிரிவுகளை உள்ளடக்கி இருந்தாலும் இக்கிராமத்தில் இதுகாறும் ஜாதிச் சண்டைகள் நடந்ததில்லை.

தென்னையும் நெல்லும் அதிகம் பயிரான போதிலும், கயிறு திரித்தல், பாய் பின்னுதல், துணி நெய்தல், பெட்டி முடைதல், எண்ணெய் எடுத்தல் போன்ற குடிசைத் தொழில்களும் சிறப்பாக உள்ளன.

ஆங்கிலேயர்கள் ஆண்ட காலத்திலேயே இவ்வூரில் இந்திய அபூர்வ மணல் ஆலை நிறுவினார்கள். குமரி மாவட்டத்தில் உள்ள ஒரே மத்திய மாநில அரசு ஆலை இதுதான். இதன் வருகையால்தான் இந்த வட்டாரத்திலேயே எங்கள் ஊருக்கு முதன் முதலாகச் சாலை வசதி, மின்சாரம், போக்கு வரத்து வசதி முதலியன ஐம்பது வருடத்துக்கு முன்பே கிடைத்தது.

இந்த மணல் ஆலையில் இல்மனைட், மோனோசைட், சர்ஹான், ரூட்டைல் போன்ற பல நிற மணல் வகைகளைப் பிரித்தெடுக்கிறார்கள். இவற்றுக்குரிய மூலப்பொருள் கடற்கரையில் குவியலாக ஆங்காங்கு உள்ளது.

உலகிலே மோனோசைட் 80 சதவிகிதம் இங்குதான் கிடைக்கிறது. இதன் வளம் கருதியே குளச்சலில் துறைமுகத்தையும் ஏற்படுத்தினார்கள். இந்திய அரசு 1972ல் இந்தியாவில் சிறந்த கிராமமாக எங்கள் கிராமத்தைத் தேர்ந்தெடுத்துப் பரிசு அளித்துக் கௌரவித்தது.

சங்க காலத்துக்கு முந்தைய கட்டிடங்கள் ஆங்காங்கு இருப்பதிலிருந்து இவ்வூரின் பழைமையை உணரலாம். கடல்மீன் வாங்குவதற்காகவே வெளியூர்களிலிருந்து இங்கு வருவர். குடிநீர், சுகாதார வசதியும் ஓரளவு நன்றாகவே அமைந்துள்ளது.

இவ்வளவு வளம் வாய்ந்த கிராமத்தில் ஒரு பார்க்கோ, ஒரு விளையாட்டு மைதானமோ பெரிய படிப்பகமோ, வசதியான பஸ் நிலையமோ ஒரு பூக் சென்டரோ இல்லை.

குமரி மாவட்டத்தில் அதிக வருமானமுடைய கிராமமான போதிலும், பரிசு கிடைத்தபோதிலும் இக்குறைகள் தொடர்கின்றன. இயற்கை அன்னைதான் இக்கிராமத்தின் பெருமையையும் மானத்தையும் காப்பாற்றுகிறாள்.

-ரா. முருகேசன்

---

ஒருவர்: "உங்க பக்கத்து வீட்டுக்காரர் தகராறு பண்ணறார்னு சொன்னீங்களே, இதோ இவர கூட்டிண்டு போய் அவர ஒரு மிரட்டு மிரட்டுங்க வழிக்கு வந்துடுவார்."

அவர்: "ஐய்யய்யோ... இவர்தானே எங்க பக்கத்து வீட்டுக்காரரே...!"

-என். ராமகிருஷ்ணன்



**சு**வாமிமலையிலிருந்துகும்பகோணம் வந்த டவுன் பஸ்ஸில் ஒரே கூட்டம். கும்ப-கோணம் பஸ் ஸ்டாண்டில் இறங்கிக் கொஞ்சம் காற்று வீசாதா என்று எதிர்பார்த்த என்னை வெய்யில்தான் தாக்கியது. இவ்வளவுக்கும் முற்பகல் மணி பதினொன்றுதான் ஆகியிருந்தது.

திருவள்ளுவர் போக்கு வரத்துக்கான விசாரணைக்கான ஜன்னலைத் தேடிக்கண்டு பிடித்து பன்னிரண்டு மணிக்குச் சென்னை நோக்கிப் போகும் பேருந்துக்கான ஓர் அடையாளச் சீட்டைப் பெற்றுக் கொண்டு, எதிரே இருந்த ஒரு காப்பி ஓட்டல் பெஞ்சில் போய் உட்கார்ந்தேன்.

''ஐயா! சௌக்கியமுங்களா? எப்ப வந்தீங்க?'' என்று என்னைப் பார்த்துக் கேட்ட அந்தக் கட்டை குட்டை ஆசாமியை எனக்கு நிச்சயமாக அடையாளம் தெரியவில்லை. அந்த அறுபது வயதை எட்டிய ஆசாமியின் குரலில் நிறைய சகஜபாவம் ஒலித்தது.

''ஐயா மறந்துட்டீங்களா?... துரை-ராஜுங்க!'' என்று எனக்கு நிச்சயம் அடையாளம் புரிந்து விட்டிருக்கும் என்ற நம்பிக்கையில் என் முகத்தைப் பார்த்தார் புன்சிரிப்புடன்.

ஹுஹூம்! எனக்கு அந்த நபரை இது வரை சந்தித்திருப்பதாகவே தோன்றவில்லை.

''காப்பி சாப்பிடுங்க'' என்று மாத்திரம் சொல்லி அந்த நேரத்தில் ஞாபக சக்தியைக் கசக்கிப் பார்க்கலாம் என்று முடிவு செய்தேன்.

அந்த 'துரைராஜ்' எனக்குப் பின்னால் காலியாக இருந்த ஆசனத்தில் அமர்ந்தார்! அவர் முன் காப்பி டபரா—வைக்கப்பட்டது.

''ஐயா! வடை இங்கே நல்லா இருக்கும். சாப்பிடுங்களேன்'' என்று துரைராஜ் என்னை உபசாரம் செய்தார்.

''அவருக்கு ஒரு வடை கொடுங்க''என்று ஓட்டல் சிப்பந்தியிடம் சொன்னேன்.

நான் காப்பி குடித்து முடித்து விட்டு இரண்டு காப்பி ஒரு வடைக்கான ஒரு ரூபாய் அறுபது காசுக்கான பில்லைப் பெற்றுக் கொண்டபோது, துரைராஜ் சுவாரசியமாகத் தம் முன்னிருந்த வடையைச் சுவைத்துக் கொண்டிருந்தார்.

நான் வேகமாக எழுந்திருந்தேன்.

ஒரு மனிதனுக்கு மன நிறைவைக் கொடுத்த மகிழ்ச்சி. அதை வேண்டித் தானே காலையில் ஆண்டவன் சன்னிதியில் நின்றேன்! அதைக் கொஞ்சம் நூற்றி ஐந்து காசுச் செலவில் அந்தத் துரைராஜுடன் பகிர்ந்து கொண்டால் என்ன குறைந்து போகும்? என்ற ரீதியில் ஒரு இனம்புரியாத திருப்தியுடன், பஸ் நிற்கும் இடத்தை அடைந்தேன்.

திருவள்ளுவர் பேருந்து வந்து அதில் நல்ல வேளையாக இடமும் இருந்தது. வெய்யில் அலுப்பு. பஸ்ஸில் ஏறி அமர்ந்தேன். பன்னிரண்டு மணிக்கு பஸ் கிளம்பியது.

பஸ், கல்லணை, செத்தியாத்தோப்பு இவைகளைத் தாண்டிச் சீராக ஓடிக் கொண்டிருந்தது. தூங்காத போதிலும் கண்களை மூடிக் கொண்டிருந்தேன்.

பஸ் ஓர் ஊரில் நின்றது. கண்களை விழித்தேன். குறிஞ்சிப்பாடி பேருந்து நிலையம். கடிகாரத்தைப் பார்த்தேன். பிற்பகல் மணி இரண்டு முப்பது. ''இங்கே வண்டி பத்து நிமிஷம் நிற்கும். காப்பி டிபன் சாப்பிடறவங்க சாப்பிடலாம்'' என்று கண்டக்டர் தருமக் குரல் கொடுத்துவிட்டு இறங்கினார்.

பேருந்து நிலையத்திலிருந்த ஒரு சாதாரண சிற்றுண்டிசாலையில் நல்ல வியாபாரம் நடந்து கொண்டிருந்தது. வேறு திசைகளில் போகும் சில பேருந்துகளும் வந்து நின்று கொண்டிருந்தன.

சும்மா நிற்பதற்கு ஒரு காப்பி குடித்து வைக்கலாமென்று உள்ளே நுழைந்து ஓர் இடத்தைப் பிடித்தேன்.

எதிர் வரிசையில் ஐம்பது வயது மதிக்கக் கூடிய ஒருவர் உட்கார்ந்திருந்தார். என்னைச் சில விநாடிகள் உற்றுப் பார்த்தார், கொஞ்சம் செழிப்பான ஆசாமி. சரிகை வேஷ்டி, பாலிஸ்டர் சட்டை, டர்க்கி டவல் எல்லாம் அந்த ஆசாமியின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக் காண்பித்தன.

அவசரம் அவசரமாகக் காப்பியைக் குடித்துவிட்டு எழுந்துஎன்பக்கத்தில் வந்தார். சில விநாடிகள் தயங்கிவிட்டு, ''ஐயா! என்னைத் தெரியுதுங்களா?'' என்றார் குழைவாக.

மீண்டும் ஒரு பரீட்சையா?

''தெரியலியே''

''துரைராஜுங்க! ஞாபகமில்லே?'' என்று சொன்னாரோ இல்லையோ, எனக்குத் தலையே சுற்ற ஆரம்பித்து விட்டது.

இது என்ன சோதனை? சுமார் மூன்று மணி நேரத்துக்கு முன்னால் கும்பகோணத்திலே ஒரு துரைராஜ். இப்போது குறிஞ்சிப்பாடியிலே மற்றொரு துரைராஜா? ஆண்டவனே!

ஆனால் இரண்டு நபர்களுக்கிடையே நிறைய வித்தியாசம். அந்தத் துரைராஜ் காப்பியைக் கேட்டு வாங்கிக் குடிக்கும் தோற்றத்தில் இருந்தார். இந்தத் துரை

# கும்பகோணமு



ராஜ் காப்பி வாங்கிக் கொடுத்து உபசரிக்கும் தோற்றத்தில் இருந்தார்.

குறிஞ்சிப்பாடி நபர் என்னை அதிகம் சோதிக்கவில்லை. என் பெயரைக் குறிப்பிட்டு ''நீங்கதானே? பார்த்து இருபத்தி அஞ்சு வருஷத்துக்கு மேலே ஆயிடுச்சே! ஐயாவுக்கு மறந்து போயிருக்கும்! ஐயா பாளையங்கோட்டையிலிருந்தபோது ஐயா வீட்டுக்குப் பேப்பர், மாகஸைன்கள் எல்லாம் போட்ட துரைராஜுங்க... ஐயாவும் மெட்ராசுக்குப் போயிட்டீங்க! நானும் திருச்சிக்குப் போயிட்டேன்...''

எனக்கு நினைவு வந்து விட்டது. அரை டிராயருடன் சைக்கிளில் வந்து, மரியாதையுடன் பேப்பர், சஞ்சிகைகளை விட்டெறியாமல் கையில் கொடுத்தோ, டீபாயின் மீதோ வைத்துவிட்டுப் போன துரைராஜ்!

அந்த துரைராஜுவின் குரல், என் பழைய நினைவோட்டத்தைக் கலைத்தது.

''ஐயா! பெரியம்மா சௌக்கியமா இருக்காங்களா?'' என்ற கேள்வி ஒலித்தது.

பெரியம்மா என்று குறிப்பிட்ட நபர் என் தாயார்! துரைராஜ் வரும்போதெல்லாம் அவனிடம் அன்பாக இரண்டு வார்த்தைகள் பேசும் சுபாவம் அவளுக்கு.

''அம்மா காலமாகி ஒரு வருஷத்துக்கு மேலாச்சு'' என்றேன்.

அவன் கண்களில் ஈரம் படர்ந்தது. சில கணங்கள் மௌனம்.

''பெரியம்மா உங்க குழந்தையைத் தூக்கிட்டு அம்மன் கோவில் திருவிழாப் பார்க்கப் போன நேரத்திலேதானே குழந்தையோட கால் கொலுசுகள் இரண்டையும் யாரோ கழட்டிட்டுப் போயிட்டாங்க?'' என்றான் துரைராஜ்.

''திருவிழாவில் போச்சோ? இல்லே வீட்டிலிருந்தே போச்சோ? நிச்சயமாகச் சொல்றதுக்கில்லே! ஆனாக்க, எங்க அம்மா அப்புறம் ரொம்ப நாள் வரை குழந்தைகளைத் தூக்கிட்டு வெளியே போகப் பயப்பட்டாள்.''

''ஆமா ஆமா!... உங்க வீட்டிலே கூட அந்த வேலைக்காரப் பொண்ணு பேராச்சி மேலே சந்தேகப்படப்போக அவள் வேலையை விட்டு நின்னுட்டாளே இல்லீங்க?''

''நீ நிறைய விஷயம் நினைவில் வச்சிருக்கே துரைராஜ்! அப்போ காணமற் போன கொலுசு எட்டு ரூபாய்தான். இப்போ சமீபத்திலே என் மகள் தன்னோட மகனுக்கு நூற்றிருபது ரூபாய் கொடுத்து ஒரு ஜோடி வாங்கியிருக்கா! காலம் எவ்வளவு மாறிப் போச்சு பார்த்தியா?'' என்றேன் நான்.

''ஐயா! அந்தக் கொலுசுகளை அந்தப் பேராச்சிப் பொண்ணு எடுக்கலே! திருவிழாக் கூட்டத்திலே எடுத்த ஆசாமி யாருன்னு எனக்குத் தெரியும்'' என்று வேறு பக்கமாகப் பார்த்துக் கொண்டு துரைராஜ் சொன்னபோது நான் திடுக்கிட்டேன்.

எங்கள் வீட்டில் எல்லோருமே அந்தப் பொண்ணைத்தான் சந்தேகித்தார்கள். இப்போது காலம் கடந்து அந்த எண்ணத்தை மாற்ற துரைராஜ் உதவினானா?

துரைராஜ் தொடர்ந்து பேசினான்.

''ஐயா! அப்போ பாளையங்கோட்டையிலே கிங்காங் தாராசிங் இவங்களையெல்லாம் வரவழைச்சுக் குஸ்திப் பந்தயம் ஏற்பாடு செய்திருந்தாங்க. நினைவிருக்கிறதா? அந்தக் குஸ்தியைப் பார்க்க ஒருத்தனுக்கு அடக்க முடியாத ஆசை. கையிலே காசில்லை. பார்த்தான். பெரியம்மா இடுப்பிலே இருந்த குழந்தை கால்களிலே கெட்டி வெள்ளிக்-கொலுசுகள்! ஒரு கொலுசைக் கழற்றத்தான் திட்டம் போட்டான். அவன் அதிர்ஷ்டம் இரண்டுமே சுலபமாகக் கழண்டுக்கிட்டன. நேரா திருநெல்வேலி டவுனுக்குப் போயி நகைக் கடையிலே வித்தான். ஐந்து ரூபாய் கனியாகக் கிடைச்சது. ஐந்து நாள் குஸ்தி பார்க்கலாமே! டிக்கட் ஒரு ரூபாய் தானே! சந்தோஷத்திலே வீட்டுக்கு வந்தான்.''

''என்ன துரைராஜ்! கூடவே இருந்து பார்த்த மாதிரிப் பேசறே?... யாரு அவன்?'' என்ற என் கேள்விகளுக்குப் பதில் சொல்லாமல் அவன் தொடர்ந்தான்.

''வீட்டுக்கு வந்தா அங்கே நிலைமையே மாறியிருந்தது. அந்தத் திருட்டுப் பய அம்மாவுக்கு உடம்பு சரியாக இல்லே. ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கிட்டுப் போனான். இரண்டு நாள் கழிச்சு அந்த அம்மா வீட்டுக்கு வந்தாங்க. கொலுசுக் காசு ஓடியே போச்சு. குஸ்தி ஆசையும் போயிருச்சு. அப்பத்தான் அந்தப் பேராச்சிப் பொண்ணு அவங்க வீட்டுக்கு வந்து அவன் அம்மாகிட்டவே தனக்குத் திருட்டுப் பட்டம் கிடைச்சதைச் சொல்லி அழுதா.

''எந்தப் பாவிப்பய மகனோ திருடினதுக்கு உனக்கு அந்தப் பட்டத்தைக் கட்டிட்டாங்களே! எனக்குக் கொஞ்சம் நடமாட முடிஞ்சதும் அவுங்க வீட்டுக்கு உன்னைக் கூட்டிக்கிட்டுப் போயி உனக்கு நான் சாமீன் கொடுக்கறேன்'' என்று அந்தக் கிழவியம்மா தைரியம் சொன்னாங்க.

''பக்கத்திலே நின்னுக்கிட்டிருந்த மகனுக்குத் தன் தாய் தன்னையே திட்டிக் கொண்டது போலிருந்தது! இந்த நிலைக்கு அவளை ஆளாக்கினதற்காக அவன் துடிக்கப் போனான். அவன் செய்த முதல் திருட்டும் அதுதான்; கடைசித் திருட்டும் அதுதான். அன்னிக்கு

# றிஞ்சிப்பாடியும்



ராவுலே அவன் வீட்டிலே சொல்லிக்காம, திண்டுக்கல்லுக்குப் போயிட்டான்.

''அங்கே தூரத்து உறவுக்காரர் ஒருவர் மளிகைக் கடை வைச்சிருந்தாரு. அவரைக் கெஞ்சி அவர் கடையிலே எடு பிடியாக வேலைக்குச் சேர்ந்தான். அப்புறம்தான் அம்மாவுக்கே தகவல் கொடுத்தான்.

''ஐந்து வருடத்திலே அந்தக் கடைக்கார உறவுக்காரர் அவன்சாமர்த்தியத்தைப்புரிந்து கிட்டாரு. திருச்சியிலே ஒரு தனிக் கடை திறந்து அதைப் பார்த்துக்கச் சொன்னாரு. பத்து வருஷத்திலே அந்தக் கடைக்குச் சொந்தக்காரனாகவே ஆயிட்டான்.''

''அது சரி துரைராஜ்! அவன் உனக்குத் தெரிஞ்சவனா?.. என்னவோ புத்திக் கோளாறு அப்புறம் யோக்கியனாயிட்டானில்ல! அது போதும்! அது போதும்!... நீ இப்போ நல்ல நிலையிலேஇருக்கேன்னு நினைக்கிறேன். எப்பப் பாளையங்கோட்டையை விட்டுக் கிளம்பினே?....'' சொந்த விஷயத்துக்கு வந்தேன்.

''ஐயா! நான் ஒரு தவறு பண்ணிட்டேன்'' நிறுத்தினான்.

''மூணு பசங்க! எல்லாம் பொம்பளை!... ஐயா!என் தவற்றை நான் ஒப்புத்துக்கிட்டாத் தான் என் மனப் பாரம் குறையும்!... ஐயா! உங்க குழந்தை கொலுசுகளைக் கழற்றினவன் வேறு யாருமில்லை ஐயா! நானே தான்! அடுத்த மாசமே உங்களைப் பார்த்துக் கால்லே விழுந்து மன்னிப்புக் கேட்கணும். புதுசா ஒரு ஜோடி கொலுசு வாங்கிக் கொடுத்துடணும்னு தவிச்சேன். நீங்க எங்கேயோ வடக்கே மாற்றிப் போயிட்டிங்கன்னு சொன்னாங்க!என்னிக்காவது ஒரு நாள் சந்திக்கலாங்கற நம்பிக்கை மாத்திரம் இருந்தது. அந்த கொலுசுகளுக்குக் கிடைத்த ஐந்து ரூபாயோடு அபராதமாக நூறு ரூபாய்களையும் சேர்த்து நூற்றி ஐந்து ரூபாயை முடிஞ்சு வைச்சுட்டேன்!... இன்னிக்கு உங்களைப் பார்த்ததும் எனக்கு ஜெயிலிலிருந்து பல வருஷங்களுக்கு அப்புறம் விடுதலையாகி வந்த சந்தோஷ உணர்ச்சி ஏற்படுதுங்க! என் தண்டனைக் காலம் முடிஞ்சு போச்சு...'' துரைராஜ் உணர்ச்சி வசப்பட்டு மணிபர்சைத் திறக்க முயன்றான்.

எனக்குப் பிரமையிலிருந்து விடுபடச் சில கணங்களாயின. கையை அசைத்து அவன் செய்கையைத் தடுத்தேன். துரைராஜைப் போல் தவறுகளை உணர்ந்தவர்களோ, அதை மனம் விட்டுஒப்புக் கொள்பவர்களோமிகமிக அபூர்வமாகப் போய்விட்ட இந்தக் காலத்தில் அவன் எனக்கு ஒரு மகானாகத் தோன்றினான்.

''துரைராஜ்! உன்னைப் பார்த்துப் பெருமைப்படறேன். அந்த நூற்றி ஐந்து ரூபாயை வச்சுக்க! நீ எப்பவாவது பாளையங்கோட்டை பக்கம் போனால் அந்தப் பேராச்சியைச் சந்தித்து அவளிடம் கொடு. தன்னுடைய திருட்டுப் பட்டம் கழற்றப்பட்டதுன்னு சந்தோஷப்படுவா! விஷயத்தைச் சொல்லியே கொடு. நீயும் உயர்ந்துட்டே! காலமும் ரொம்ப ஓடிப்போச்சு! நான் வரட்டுமா?'' என்ற என்னைத் துரைராஜ் தடுத்து நிறுத்தினான்.

''ஐயா!... பேராச்சி இப்போ என் பெஞ்சாதி! எங்கம்மா சொல்லுக்குக் கட்டுப்பட்டு அவளுக்குத் தாலி கட்டினேன். சந்தோஷமா வச்சிக்கிட்டு இருக்கேன். அவ கிட்டப் போயி இப்போ நான் திருடன்னுக்க....''

''புரியுது துரைராஜ்! சொல்ல வேண்டாம்! அந்த ரூபாயைத் தகுதியான, சிரமதசையிலிருக்கும் குடும்பத்துக் குழந்தைகளுக்குச் சட்டைத் துணி வாங்கிக் கொடுத்துடு. அதைத்தான் நான் விரும்பறேன்...''

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து விட்டேன். பஸ் கிளம்பியது. துரைராஜ் கைகளை ஆட்டிக் கொண்டிருந்தான்.

கும்பகோணம் துரைராஜுக்கு நூற்றி ஐந்து பைசாக்கள் செலவழித்தேன். குறிஞ்சிப்பாடி துரைராஜ் நூற்றி ஐந்து ரூபாய்களோடு வந்து நின்றான். இதில் ஏதோ தத்துவம் இருக்கிறதாக மட்டும் புலப்பட்டது! என்ன என்று புரியவில்லை.

பஸ் பாண்டிச்சேரியில் கொஞ்ச நேரம் நின்றது. திண்டிவனத்தில் கொஞ்ச நேரம் நின்றது. நல்லவேளை! வேறு துரைராஜ்கள் என்னை நாடி வரவில்லை!

---

"மூத்த பையன் டியூஷனுக்கு மாதம் நாற்பது ரூபாய் அழுகிறேன். இளையவனுக்கு முப்பது ரூபாய் அழுகிறேன். இவைதவிர, வீட்டுக்காரனுக்கு வாடகை நூறு ரூபாய் அழவேண்டியிருக்கு. பால்காரன், மளிகைக்காரன்களுக்கு அறுபது அறுபது அழணும். டாக்டருக்கு அழுகிற தொகைக்குக் கேட்கவே வேண்டாம்......"

"அது சரி; உங்களுக்கு ஆபீசிலே மாசம் எத்தனை ரூபாய் அழுகிறாங்க?" -பெ. கலாசாமி



# 3 மாதத்திற்குப் போதுமான இரும்பு சசத்துடன் குழந்தை பிறக்கிறது



## 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

### இரும்புச்சத்து அதிகமுள்ள ::பாரெக்ஸ் கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றுக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது."

—Dr. Subhash C. Arya "Infant & Childcare for the Indian mother"

**டாக்டர்கள் ::பாரெக்ஸ். சிபாரிசு செய்யக். காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப் பட்டது ::பாரெக்ஸ்—குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப்பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும் உடல் ஆரோக்கியத்திற்கும் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக. அடங்கியது—::பாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ::பாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-203 TAM

# விஞ்ஞானப் பக்கங்கள்



✂ சர்க்கரை எவ்வளவு?

## இரத்தத்தில் சர்க்கரை உள்ளவர்களுக்கு

இரத்தத்தில் சர்க்கரை உள்ளவர்கள் அடிக்கடி சர்க்கரை அளவை அறிந்து அதற்கேற்ப உணவில் மாற்றம் செய்து இன்சுலின் எடுத்துக் கொள்ளும் அளவைச் சரிசெய்து கொள்ள வேண்டும். ஆனால் அடிக்கடி இரத்தமெடுத்து லேப்பில் சோதித்துக்கொள்வதென்பது கஷ்டமான காரியம். இதற்கு உதவும் வகையில் கைக்கு அடக்கமான எலக்ட்ரானிக் கருவி ஒன்றை அமெரிக்காவில் உருவாக்கியுள்ளனர். நோயாளி ஒரு சொட்டு இரத்தம் கருவியின் ஒரு பகுதியில் வைக்க வேண்டும். ஒரு நிமிடத்திற்குள் கருவியின் டிஜிடல் காட்டி இரத்தத்தில் சர்க்கரை அளவைத் துல்லியமாக அறிந்து நம்பர்களாகச் சொல்லிவிடும். எப்போதும் கையிலிருந்தால் தேவைப்பட்ட போது சோதனை செய்து கொள்ளலாம். விலை சுமார் 3000 ரூபாய்.

## இசைப் பிரியர்களுக்கு...

இசைத்தட்டின் ஒரு பக்கம் பாடி முடிந்த பின் திரும்ப அடுத்த பக்கத்தை நாம் திருப்பி வைக்க வேண்டும். இனி இந்தத் தொந்தரவு இல்லை. ஜப்பானின் ஷார்ப் கம்பெனியினர் புதிய VZ-3000 என்ற டேப் ரெகார்டர் இணைந்த ரெகார்ட் பிளேயரை வடிவமைத்திருக்கிறார்கள். இந்த அமைப்பில் இசைத்தட்டு செங்குத்தாகச் சுழல்கிறது.

இசைத்தட்டை நாம் திருப்பி வைக்க வேண்டிய அவசியமின்றியே இரு பக்க இசையையும் அனுபவிக்கலாம். இதில் இரண்டு பிக் அப்கள் நேர்க் கோட்டில் பக்கவாட்டில் பயணம் செய்வதால் துல்லியமான தொந்தரவற்ற இசை கேட்கலாம். இதில் உள்ள மோட்டார் இசைத்தட்டின்ஒருபகுதி முடிந்தபின் தானாகத் தன் சுழலும் திசையை மாற்றிக் கொள்வதால் இரண்டு பக்கத்தையும் தொடர்ந்து கேட்க முடிகிறது. ஒரு பட்டனைத் தட்டினால் இசைத்தட்டின் ஒரு பக்கமே திரும்பத் திரும்ப இசைக்கும். இன்னொரு பட்டனைத் தட்டினால் இரண்டு பக்கமும் தொடர்ந்து இடைவெளியின்றி ஒலிக்கும்.



VZ-3000

## கார் வைத்திருப்பவர்களுக்கு...

மத்திய கிழக்கு நாடுகளின் எண்ணெய்ப் பிடியில் இருந்து பிற நாடுகள் வழுக்கிக் கொள்வதற்கான ஆயத்தங்கள் ஆரம்பமாகிவிட்டன. அமெரிக்காவின் ஜெனரல் மோட்டார் கம்பெனியார் கரியால் ஓடக்கூடியகார்களைத் தயாரிக்கப்போகிறார்களாம். கரியை மிக மிருதுவான நுண்ணிய பொடியாக்கும் புதிய முறைகளைக் கண்டு பிடித்ததால் இது சாத்தியமாகிறது. தற்போது சிறிய அளவில் இரண்டு பரிசோதனைக் கார்கள் செய்திருக்கிறார்கள். என்ஜினில் சில மாற்றங்கள் செய்யப்பட்டவுடன் கரிக்கார் தெருவில் குறைந்த அளவில் புகை பரப்பிச் செல்லும். எண்ணெயை விட கரிக்கான செலவு பாதியாகவே இருக்கும். நம் நாட்டில் கரி மிருதியாகவே கிடைப்பதால் மலிவாகவே கிடைப்பதால் மேலே போய்க்கொண்டிருக்கும் பஸ் கட்டணம் கூடக் குறையலாம்.

## நளினி சாஸ்திரி



### தலை சொட்டை ஆகிக்கொண்டிருப்பவர்களுக்கு...

சமீபத்தில், தண்ணீரில் கலந்துள்ள குளோரின் தலை முடியைச் சக்தி இழக்கச் செய்து தலையுடன் அதற்குண்டான பிடிப்பைப் பலவீனப்படுத்திவிடுகிறது என்று பாப் குப்தா என்பவர் கண்டுபிடித்துள்ளார். சீப்பால் வாரும்போது முடி சீப்போடு வருவதற்கு குளோரினும் காரணம். நீச்சல் குளங்களிலும் நகர நீர் வாரியமும் குளோரினை நிறையப் பயன்படுத்துவதால் அடிக்கடி தலைக்குக் குளிப்பது ஆபத்து.

### உலோகவியல் மாணவர்களுக்கு....

படத்தில் உள்ள மனிதன் கைகளால் பிடித்திருப்பது பழுக்கக் காய்ச்சப்பட்ட ஒரு பொருள். 10 செகண்டுகளுக்கு முன்னர்தான் அந்தப் பொருள் அடுப்பிலிருந்து எடுக்கப்பட்டது. இருந்தும் வெறும்கையினால் அந்தமனிதனால் பிடிக்கமுடிகிறது. காரணம் அந்தப்புதிய பொருள் தனது வெப்பத்தை நொடியில் விட்டு விடும். விண்வெளியில் சாதனைகளை ஆரம்பித்திருக்கும் ஸ்பேஸ் ஷட்டில் கலத்தின் உடல் இந்தப்பொருளால் ஆனது. இதன் பெயர் HRSI (High Temperature reusable Surface Insulation) ஷட்டில் விண்ணில் சுற்றுலா முடிந்து பூமிக்காற்று மண்டலத்தில் நுழைகையில் 1260° C க்குமேல் வெப்பத்தை அடைகிறது. (கவனிக்க: கொதிக்கும் நீரின் வெப்பம் 100° C தான்) ஷட்டிலின் உடல் பாகம் HRSI பொருளால் ஆனதால் அதிகபட்ச வெப்பத்தை உடனே இழந்து சாதாரண வெப்ப நிலைக்கு மாறிவிடுகிறது.







### தாகமானவர்களுக்கு....

இந்தக் கோடையில் டபுள் செவனை விட தம்ஸ் அப்பை விட சாதாரணத் தண்ணீரே சிறந்ததாக நிவாரணி. உடம்பிலுள்ள நீரின் அளவு வியர்வையால் குறைவதாலேயே தாகம் எடுக்கிறது. சாதாரண நீர் குடித்தவுடன் உடலில் கலந்து தேவையைச்சரிக்கட்டி விடுகிறது. குளிர் பானங்களில் சோடியம், பொட்டாசியம் இவற்றின் அளவு அடர்ந்துள்ளது. எனவே பானம் உடனே உடலில் கலக்காமல் உடம்பின் பிற பகுதியிலிருந்து நீரை எடுத்து இந்த உப்புக்களைநீர்க்கச் செய்து பிறகே உடலில் கலக்கும். எனவே உடனடியாகத் தாகம் தீர்ப்பது தண்ணீர் தண்ணீர்.

### பிளட்பிரஷர் குறைய ஆனந்தபைரவி ராகம் கேளுங்கள்

ரத்த அழுத்தம் அதிகமாக உள்ளவர்கள் ஆனந்தபைரவி ராகம் கேட்க வேண்டும். அது நோயின் வேகத்தை வெகுவாகக் தணிக்கும்.

சொன்னவர்: திருத்தணியில் நடந்த ஸ்ரீ முத்துஸ்வாமி தீட்சதர் விழாவில் திருகுன்னக்குடி வைத்யநாதன்; சொல்லக் கேட்டவர்: எஸ்.பி. வெங்கட்ராமன்

## 19

கூதலை மூடிவிட்டு மேஜைக்கு அப்பால் தன் எதிரே வந்து நின்ற சந்தியாவை முதல் முதலாகக் காண்கிறவள் போல் தலைவி காலோடு தலை ஒரு முறை மூக்குக் கண்ணாடி வழியே மௌனமாக வெறித்தாள். தான் அந்தப் பள்ளிக்கூடத்தின் தலைவி — மற்ற அனைவரும் அவளுக்கு அடிபணிந்து நடக்கக் கடமைப்பட்டவர்கள் — சரி சமமான அந்தஸ்துக்குத் தகுதியற்றவர்கள் என்ற ஆழமான தொரு நம்பிக்கை அவளுக்கு எப்பொழுதுமே உண்டு.

ஆசிரியைகளுடன் வாரத்தின் முதல் நாள் கூட்டத்தின்போது மட்டுமே அவர்களை உட்கார வைத்துக் கொண்டு பேசுவாள். தனிப்பட்ட முறையில் எந்த ஆசிரியையாவது ஏதாவது விசாரிக்கத் தன் அறைக்கு அழைத்திருந்தால் நிற்க வைத்தே பேசி அனுப்பிவிடுவது வழக்கம். அப்படி ஓர் அதிகார தோரணையில் ஊறிப் போனவள் தலைவி. மேஜை ஓரத்தை விரல்களால் பிடித்தபடி நின்ற சந்தியாவை மீண்டும்ஒரு முறை கண்ணாடி வழியே முறைத்தாள்.

''அவசரமாகப் பார்க்கணும்னு அழைச்சீங்களாம். வகுப்பைத் துவங்கிவிட்டேன். மாணவிகளைச் சிறிது நேரம் அமைதியாக இருக்கச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன்'' என்றாள் சந்தியா.

''ஆமாம். ரொம்ப அவசரமான சங்கதி தான். அதனால்தான் வரச் சொன்னேன். எந்த விஷயத்தையும் நான் சூடு ஆறுமுன்னே அலசி முடிச்சுவிடுவது வழக்கம்னு உனக்குத் தெரியும் இல்லையா? காரமாகக் கேட்டபடி மேஜை மீது கிடந்த தடிமனான ஒரு புத்தகத்தை நகர்த்தி அடியில் வைத்திருந்த ஒரு கடித உறையைக் கையில் எடுத்தாள்.

''இன்னிக்குக் காலைத் தபாலில் எனக்கு வந்த கடிதம். இதை நீ படிச்சுட்டு உன் முடிவு என்னன்னு சொல்லணும்.'' அதிகாரமாக அதட்டியபடி அதைச் சந்தியாவின் முன் மேஜையின் மேல் விட்டெறிந்தாள்.

மூக்கும் முகமும் சிவக்க — நெஞ்சு கோபத்தில் படபடக்க, சந்தியா அதைக் கையில் எடுத்து உறையிலிருந்த கடிதத்தை உருவினாள். பிரிக்குமுன்பே அவள் சட்டென்று ஊகித்துக் கொண்டு விட்டாள். பழுப்பாகிவிட்ட ஒரு கடிதத்தில் பேனாவால் எழுத்துகள் மீது மசி புரள எழுதியிருந்த கடிதத்தை அவள் தனக்குள்ளேயே படித்துக் கொண்டாள்.

—''தங்களது தலைமையில் சிறப்பாக இயங்கி வரும் மங்கையர்க்கரசி பெண்கள் பள்ளி நம் ஊர் மக்களின் மதிப்பைப் பெற்ற ஒரு பள்ளிக்கூடமாக இதுவரை இருந்தது உண்மை. இனி நீடித்து அதே மதிப்புடன்



இயங்குமா என்கிற சந்தேகம் எழுந்ததால் அவசரமாகத் தங்களை எச்சரிக்கவே இந்தக் கடிதம் அனுப்பப்பட்டுள்ளது. தங்கள் பள்ளியில் வேலை பார்க்கும் சந்தியா என்னும் ஆசிரியைக்கும் பூதலூர் பாலி கிளினிக்கில் வேலை செய்யும் டாக்டர் கிரிதரன் என்பவருக்கும் இடையே ஏற்பட்டுள்ள நெருக்கமான தொடர்பு பள்ளிக்கூடத்தின் கௌரவத்துக்கு நாசம் தேடுவதுடன் பள்ளி மாணவிகளின் ஒழுக்கத்துக்கும் கேடு விளைவிக்கும் வகையில் உள்ளது. ஏற்கனவே சிலருக்குத் தெரிந்து விட்டிருக்கும் இந்த விவகாரம் சமூகத்தில் மிக அசிங்கமாகப் பரவி விடுமுன், பள்ளிக்கூடத்தின் நல்ல பெயர் விளங்குமுன் தாங்கள் தக்க நடவடிக்கை எடுத்துத் தடுக்கமுயலுவது அவசியம். இது சம்பந்தமாகத் தாங்கள் எடுக்கப்போகும் கண்டிப்பான தீர்மானம் பள்ளிக்கூடத்தின் மானத்தைக் காப்பாற்றுவதுடன் தங்களுக்குச் சமூகத்தின்பால் உள்ள அக்கறைக்கு ஓர் எடுத்துக்காட்டாக இருக்கு மென்பதில் சந்தேகமில்லை. பல காரணங்கள் கொண்டு என் பெயரைத் தெரிவித்துக் கொள்ள முடியாததற்கு வருந்தும் —ஒரு நல்ல நண்பன்.'



''இதற்கு உன் பதில்?'' என்று அதட்டினுன் தலைவி.

அசட்டையாகத் தன் தோள்களைக் குலுக்கினுள் சந்தியா. ''ஒரு மொட்டைக் கடிதம். இதற்கு நீங்கள் என்ன பதில் எதிர்பார்க்கிறீங்க?'' வார்த்தைகள் சூடாக வந்தன.

''நெருப்பில்லாமல் புகை வராது. இந்தப் பள்ளிக்கூடத்தில் எத்தனையோ ஆசிரி

# சாதாரண மனிதன்

'லக்ஷ்மி'



யைகள்வேலை பார்க்கிறாங்க. அவங்க யாரைப் பத்தியாவது இப்படி ஒருகடிதம் வந்திருக்கா? உன்னைப்பற்றி மட்டும் ஏன் வரணும்?''

''இதுவரைஎன்னைப் பற்றி யாராவது ஏதாவதுசொல்லியிருப்பாங்களா? இரண்டு வருஷங்களுக்கு மேல் வேலை பார்க்கிறேன். என் வேலையில் தான் ஏதாவது தவறுகளை நீங்கள் கண்டதுண்டா? இப்போ ஒரு மொட்டைக் கடிதம் யாரோ என்னைப் பற்றி எழுதியிருக்காங்க — நாளைக்கு இன்னொரு டீச்சரைப் பற்றி வரலாம். அதுக்குப் பிறகு உங்கள் நிர்வாகத்

தைப் பற்றிக் குறைவாக மேலதிகாரிக்கு யாரோ எழுதலாம். இதுக்கெல்லாம் முடிவு ஏது? யாருக்கோ இப்போது என்னைப் பிடிக்கலை. உங்கள் மனத்தில் கலவரம் உண்டாக்க இப்படி எழுதியிருக்காங்க. இதை எழுதியவருக்கு உண்மையான சமூக அபிமானமும் துணிவும் இருந்தால் நேரில் வந்து உங்களிடம் முறையிட்டுக் கொண்டிருக்கலாம். ஒரு பெண் தன்னந் தனியாகத்தன் கல்வியின் துணையால் வாழ விரும்புவதைக் காணப் பொறுக்காத பொறாமைக்காரர் வேலை இது. இதைப்பற்றி எனக்கு அக்கறையில்லை.'' படபடவென்று சந்தியா பேசினாள்.

''தலைவிங்கிற நிலையில் நான் அக்கறை காட்டித்தானே ஆக வேண்டும்? அப்படியானால் இந்த டாக்டர் கிரிதரனைத் தெரியாதுன்னு மறுக்கிறாயா?''

''ஏன் மறுக்கணும்? பொய் சொல்லக் கூடாது பாப்பான்னு பாரதியாரை மாணவிகளுக்கு அறிமுகம் செய்து கொண்டிருக்கும் ஆசிரியையான நானே ஏன் பொய் சொல்ல வேண்டும்? அவர் எங்கள் குடும்பத்துடன் நெருக்கமாகப் பழகும் ஒரு நண்பர். ஒரு வகையில் தூரத்து உறவினர். இன்னும் விவரமாக் கேட்டீங்கன்னா அவர் என்னை விரும்புகிறார். நான் அவரை விரும்புகிறேன். பொருளாதார நிலை சீரானதும் திருமணம் செய்துகொள்ளும் உத்தேசம் இருக்கிறது. எங்கள் குடும்பம் வரவேற்கும் சம்பந்தம் இது.''

''அப்படியா?...'' சீறினாள் தலைவி.

''காதலிப்பதும் கல்யாணம் செய்து கொள்வதும் தவறு என்று கருதினால் 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்...' என்னும் ராமாயணப் பகுதியை நீக்கிவிட வேண்டும். ஷேக்ஸ்பியரை ஒதுக்கிவிட வேண்டும். திருக்குறளைத் தள்ளிவிட வேண்டும்.''

''ஷட்-அப்! நீ ரொம்ப அதிகம் பேசுகிறாய். சொன்னது சரியாப் போச்சு. திமிர் பிடிச்ச பெண் என்பதை உன் பேச்சு நல்லாவே புரிய வைக்கிறது. நீயும் அந்த டாக்டரும் ஏற்படுத்திக் கொண்டிருக்கும் தொடர்பைப் பத்தி அசிங்கமான தகவல் ஏற்கனவே காதில் பட்டது. இதற்காக நான் உன் மேல் டிஸிப்ளினரி ஆக்ஷன் ஏன் எடுக்கக் கூடாது? உன் நடத்தை பள்ளிக்கூடத்தின் ஒழுக்கக் கட்டுப்பாடுகளுக்குப் பாதகமாக இருப்பதாக மேல் அதிகாரிகளுக்கு எழுதி உன்னை வேலையிலிருந்து நீக்கிவிட என்னால் முடியும் தெரியுமா?''

குப்பென்று முகம் முழுவதும் சிவந்து நெஞ்சில் நெருப்பாகக் கோபம் புரண்டு-கொண்டு விட்டது சந்தியாவுக்கு. மேஜையை இறுக்கமாகப் பற்றிக் கொண்டு தலையை நிமிர்த்தி உற்றுப் பார்த்தாள்.

''ஆசிரியர்களின் பாதுகாப்புக்காக அமைக்கப்பட்ட சட்டங்களை அவ்வளவு சுலபமாக உடைக்க முடியாது என்பதும் தங்களுக்குத் தெரியும் அல்லவா? ஒழுக்கக் கட்டுப்பாட்டை மீறிய குற்றச்சாட்டை என்மீது கொண்டு வர நீங்கள் தக்க காரணங்கள் காட்டி நிருபிக்க வேண்டும். அவைகளை எதிர்த்துக் கல்வித் துறை மேலதிகாரிகளிடம் நியாயம் கேட்க நான் மனுச் செய்துகொள்ள முடியும். அந்த உரிமை எனக்கு உண்டு. வேலையிலிருந்து நீக்கம் செய்வது அத்தனை சுலபமான காரியமும் இல்லை. அதை எதிர்த்து நீதிமன்றம் வரை போய் வழக்காட எனக்கு உரிமை இருக்கிறது என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.''

''வாத்தியார் மகள் இல்லையா? வாய் கிழியச் சட்டங்களைப் பத்தி நிறையவே தெரிந்து வைத்துக்கொண்டிருக்கே. ஆனாலும் உனக்குப் பலவித உபத்திரவங்களைக்-கொடுத்துப் பள்ளிக்கூடத்திலிருந்து ஓட்ட என்னால் முடியும் என்பதும் உனக்குத் தெரியுமில்லையா?''

''வேண்டாம் என்று நிர்மானித்த பிறகு நீங்கள் இல்லாத தவறுகளை வேணுமென்றே கற்பித்துச் சங்கடம் கொடுக்கலாம். ஆனால் நீங்கள் அப்படியெல்லாம் செய்யத் துணிய மாட்டீங்க. என்னைப் போல இள வயதில் பெற்றோரை இழந்து, தன்னந் தனியே கல்வியின் துணையைப் பற்றிக் கொண்டு பாடு பட்டு இந்தத் தகுதிக்கு வந்திருக்கிறவங்க. விஷயத்தில் உங்களது மனச்சாட்சி உங்களைஉறுத்தும். தவறான காரியங்களைச் செய்ய விடாது என்பது உறுதி.... இந்த மொட்டைக் கடிதத்துக்குப் பதில் சொல்ல இதற்கு மேல் என்னிடம் ஏதும் இல்லை. மன்னித்துக் கொள்ளுங்கள். வகுப்பில் மாணவிகள் அமைதி குலைந்து சத்தம் போடத் தொடங்குவார்கள். அப்படிச் செய்தால் அதற்கு நான் பொறுப்பல்ல....'' வணக்கம் தெரிவித்து விட்டு விர்ரென்று வெளியே வந்தாள். வராந்தா மீது நடக்க முடியாது கால்கள் தள்ளாடுவதை உணர்ந்தாள். ஆனாலும் மனத்தில் ஆத்திரம் கலந்ததொரு ஆவேச உணர்வு பொங்கிப் புரண்டது.

உண்மையைக் கூற அஞ்சி அடிமையிலும் கேவலமாகக் கைகட்டி வாய் பொத்தி அவள் அந்தப் பள்ளியில் இதுவரை பணி புரிந்தது போதும். தலைவி பயமுறுத்தியதைப் போல— அவளை வேலையிலிருந்து நீக்கம் செய்துகொள்வதாக இருந்தால் — தாராளமாகச் செய்து கொள்ளட்டும். அதற்காக அவள் அஞ்சி ஒடுங்கி, கெஞ்சி, பொய்க்குத் தலை சாய்த்து வணங்கி வாழப் போவதில்லை. இதை விட வீட்டுத் தோட்டத்தைத் தன் உடல் உழைப்பால் சீராக்கி — பயிர்களைச் செவ்வனே கவனித்துக் கிடைக்கும் காய்கறிகளைக் கூடையில் வைத்துத் தலையில் தூக்கிக் கொண்டு தெருவில் விற்று நாலு காசு சம்பாதித்து நிம்மதியாக மானத்தோடு வாழ அவளால் முடியும். எவ்வளவு துச்சமாக — அசட்டையாக — கர்வமாகத் தலைவி பேசிவிட்டாள்?

வகுப்பு முடிந்ததும் அவள் வீடு திரும்பும் போது பஸ் பயணத்தின் முழு நேரமும் அவள் மனத்தை அந்தக் கடிதத்தைப்பற்றிய சிந்தனைதான் வியாபித்துக் கொண்டிருந்தது.

ஆமாம்! அந்தக் கடிதத்தை யார் எழுதியிருப்பார்கள்? இப்படிச் சுற்றி வளைத்துத் தமிழை மென்று தின்று எழுதும் வழக்கம் உடைய ஆசாமி... அவரைப் பூதக் கண்ணாடி வைத்துத் தேட வேண்டிய சிரமம் இல்லையே! அவளது ஊகத்தின் முன் பளிச்சென்று அவர் தெரிகிறாரே?

# முன்னோக்கிச் சிந்தியுங்கள்!

உங்கள் குடும்பத்தின், குறிப்பாக
உங்களது மழலைச் செல்வங்களின்
வளமான எதிர்காலத்துக்காக இப்போதே
திட்டமிடத் தொடங்குங்கள்.

லக்ஷ்மி விலாஸ் பாங்கின் வாடிக்கை
யாளரான ஒவ்வொருவரும் பெறுவது
தனித்தன்மை வாய்ந்த ஒரு மகிழ்ச்சி
கரமான அனுபவம். தமது சேமிப்புக்குக்
கணிசமான வட்டியும், அத்துடன்
'போனஸாக'க் கனிவான சேவையும்
அவர்களுக்கு இங்கே கிடைக்கிறது.

உங்கள் அருகாமையிலுள்ள கிளைக்கு
இன்றே விஜயம் செய்யுங்கள். எங்கள்
மானேஜர் உங்களுக்கு ஏற்ற சேமிப்புத்
திட்டம் பற்றி ஆலோசனை சொல்வார்.

உங்களுக்குச் சிறப்பாகப் பணிபுரிய
எங்களுக்கு வாய்ப்பு அளியுங்கள்.




**லக்ஷ்மி விலாஸ்
பாங்க் லிமிடெட்**

பதிவு அலுலகம் : கரூர்-639 001
நிர்வாக அலுவலகம்:சென்னை-600 086

என். முத்தியாலு — ஜெனரல் மானேஜர்
என்.வி. ஸ்ரீநிவாசன் — சேர்மன்

அந்நியச் செலாவணியில் வர்த்தகம் செய்ய அங்கீகாரம் பெற்ற வங்கி.

அவளது முன்னேற்றத்தில் — அவளது நிறைவான வாழ்க்கையைப் பற்றி வயிற்றெரிச்சல் பட்டு முட்டுக்கட்டையாக, காலில் தைத்த கருவேலன் முள்ளாக நிற்பவர் குமரேசன் அத்தான் ஒருவர்தான். கட்டாயம் இது அவர் செய்த வேலையாகத்தான் இருக்கும். குமரேசன் அத்தான் இத்தனை மட்டமாகவா இறங்கிப் போய்விடவேண்டும்?

ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடிக்கும் தந்திரம் இது.

தான் கொண்டு வந்த வரனை அசட்டை செய்துவிட்டதால் தமக்குக்கிடைக்கும் லாபங்களும் பெருமையும் மதிப்பும் போய்விட்டனவே என்று டாக்டர் ஸ்ரீதரன் மீது அவருக்கு மிக்க ஆத்திரம். தன் பேச்சைக் கேட்டு அந்த வீட்டைச் சந்தியா விற்க மறுக்கிறாள். தான் கொண்டு வந்த வரன்களுக்குத்தலை நீட்ட மறுக்கிறாள்என்று அவள் மீது தாங்க முடியாத கோபம்.

அந்தக் கடிதத்தின் மூலம் அவர் இருவர் மீதும் பழிவாங்கிக் கொண்டு விட்டிருக்கிறார்.

கூடப் பிறந்த அக்காவின் கணவர். ஆகா! எத்தனை அனுசரணை? குழி பறித்து மூடக் காத்துக் கொண்டிருக்கும் குரூர புத்தி.

''என்னம்மா எப்படியோ இருக்கே?''... கேட்டுக் கொண்டே அருகில் வந்த அத்தை ஜெகதாவைப் பார்த்ததுமே அவளுக்குத் தாங்க முடியாத துக்கம் பொத்துக் கொண்டது.

''என்னம்மா....'' ஜகதா பதறிப்போய் அருகில் ஓடிவந்தாள்.

''அத்தை! நாம் ஒரு முடிவுக்கு வரும் காலம் வந்து விட்டது. நான் எந்த முடிவெடுத்தாலும் நீங்க என்னோட ஒத்துப் போகணும். இந்த உதவி மட்டும் நீங்க செய்தால் போதும்.... அத்தை....'' பேச முடியாது விம்மியபடி நாற்காலியில் தொப்பென்று உட்கார்ந்த சந்தியா முகத்தை மேஜை மேல் வைத்துக் கொண்டு குலுங்கி அழுதாள்.

(தொடரும்)

**வ**ணக்கம் தெரிவித்து ஒருவர் என் முன் வந்து நின்றார். குப்புற விழுந்திவிடும்அளவுக்கு அவருடைய நெற்றியில் விபூதியும் குங்குமமும் இருந்தது.

''உக்காந்திடுங்க, உக்காந்திடுங்க'' என்றேன்.

அவர் நின்றபடியே, ''நாளேக்கு நம்ம படத்தை ஆர்.சி.லே பாக்கறீங்க'' என்றார்.

திரைப்படங்களின் மறு தணிக்கைக்கு ஆர்.சி. அல்லது 'ரிவைஸிங் கமிட்டி' என்று பெயர்.

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டேன். ஏனென்றால் எனக்குத்தெரியாது.

''தமிழ்க்காரங்க இருக்கிறது ஏழெட்டுப் பேரு. நாலு பேர் முதல்லே பார்த்தாங்க. இப்போ பாக்கி நீங்கதானே பாக்கணும்?''

நான் மௌனமாக நின்றேன்.

''படம் நல்ல ஃபாமிலி சப்ஜெக்ட்டுங்க. ஆறு முதல் கமிட்டிலே 'ஏ' கொடுத்துட்டாங்க.''

''இதைப் பாருங்க. பழிவாங்கறதுக்குன்னு சொந்த மச்சினியை அவ கல்யாணத்துக்கு முதல் நாள் அவ அக்கா புருஷன் பலவந்தமா நிர்வாணமாக்கி வேடிக்கை பார்க்கிறான். அந்தப் பொண்ணு தற்கொலை பண்ணிக்கறா. இந்தப் படத்துக்கு ஏன் 'யூ' கொடுக்கலேன்னு இன்னிக்கும் அந்த டைரக்டர் எங்கேனத் திட்டிண்டு அலையறாரு. உங்க படம் எப்படியோ?''

''நம்ம படத்திலே நிர்வாணமே கிடையாதுங்க. முழுக்கஃபாமிலி சப்ஜெக்ட். ஜனசமூகத்துக்குத் தொண்டு செய்யணும்னு இந்தப் படத்தை எடுத்தேங்க. அதுக்குப் போய் 'ஏ' கொடுத்து வெட்டவும் சொல்லறாங்க.''

''என்ன தொண்டு?''

''நீங்கதான் பாக்கப் போறீங்களே. முழுக்க ஃபாமிலி சப்ஜெக்ட். நீங்க எப்படியாதும் 'யூ' கொடுத்துட்டாப் போதும்.''

அந்தச் செப்பழும் சி.பி.ஐ. தலைவராக இருக்கத் தகுதி பெற்றவர். அவர் என்னை வழிமறித்த அடுத்த நாள் தணிக்கைக்கு நான் படம் பார்க்க வேண்டியிருந்தது. அதுவும் ஆர்.சி!

அவர் கூறியதில் உண்மை இல்லாமல் போகவில்லை. படத்தில் நிர்வாணம் கிடையாது. மூன்று பெண்கள். மூன்றுமுரடர்கள் அவளை மூன்றுமுறை பலாத்காரம் செய்வது மிக விரிவாகக் காட்டப்பட்டிருந்தது. அதிலுள்ள குடும்ப அம்சம் அந்த மூன்று பெண்களும் சகோதரிகள்.

''மறுபடி 'ஏ' கொடுத்து இப்படி வெட்டவும் சொல்றீங்களே'' என்று அவர் கோபித்துக்கொண்டார்.

தேவையற்ற கோபம். ஐந்தாம் வகுப்புப் படிக்கும் என் மகன் விடுமுறைக்காகக் கிராமத்தில் உள்ள அவன் பெரியப்பா வீட்டுக்குப் போனான். சிறியவர்கள் பெரியவர்களாக எல்லாரும் ஒரு டூரிங் சினிமாவுக்குப் போயிருக்கிறார்கள். படம் செப்பழத்தின் ஃபாமிலி சப்ஜெக்ட்.

என் மகன் விவரித்ததிலிருந்து ஒன்று தெரிந்தது. எந்தக் காட்சியும் வெட்டப்படாமல் பரிபூரணமாக இருந்திருக்கிறது.

இது ஒரு கற்பனைக் கதை என்றால் நம்ப மாட்டீர்கள்.

**-அசோகமித்திரன்**

✖ அசோக மித்திரன்



சாதாரண தேங்காய் எண்ணெயைக் காட்டிலும் உங்கள்
கூந்தல் வளர்ச்சிக்குகந்தது எது?

# கேசவர்த்தினி

கலந்த தேங்காய் எண்ணெ!




ஆம்! நீங்கள் அன்றாடம் உபயோகிக்கும் தேங்காய்
எண்ணெயுடன் சிறிது (சில சொட்டுகள்) கேசவர்த்தினி
கலந்து தலையில் தடவிக்கொள்ளுங்கள்.
உங்கள் கூந்தல் எழில் மிளிர
காண்பீர்கள்.

அழகிய அடர்த்தியான கூந்தலின்
பரம்பரை ரகசியம் — கேசவர்த்தினி.
ஒரு பாட்டில் இன்றே வாங்குங்கள்.




**கேசவர்த்தினி ப்ராடக்ட்ஸ்**
சென்னை-600 087

OBM 6119 TM




● ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத் குரு ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதிஸ்வாமிஅவர்கள் பள்ளி விடுமுறையான கோடை காலத்தில் பள்ளி — கல்லூரி மாணவர்களிடையே கலை-இலக்கிய ஆர்வத்தை வளர்க்கும் நோக்கத்துடன் சில போட்டிகளை நடத்துகிறார்கள்.

1. மனனம் ஒப்புவிக்கும் போட்டி.: உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் மாணவர்கள் திருக்குறளில் ''அறத்துப் பாலை'' முழுமையாக மனப்பாடம் செய்து தாங்கள் படிக்கும் பள்ளித் தலைமை ஆசிரியரிடமாவது தமிழ் ஆசிரியரிடமாவது ஒப்புவித்து அப்படி மனப்பாடம் செய்து ஒப்புவித்ததற்கு அவர்களிடமிருந்து ஒரு சான்றிதழ் வாங்கிவிடவும்.

இதேபோல் பகவத்கீதையில் 18ம் அத்தியாயத்தை மாத்திரம் ஒப்புவித்துச் சான்றிதழ் வாங்கிவிடவும்.

2. ஓவியப் போட்டி.: பெரிய புராணத்தில் வரக்கூடிய மூன்று சம்பவங்களை மையமாகக் கொண்டு மூன்று படங்களை எழுதி அனுப்பவும்.

3. கட்டுரைப் போட்டி.: சேர—சோழ—பாண்டிய — பல்லவ — மராட்டிய மன்னர்கள் தமிழகத்துக்குச் செய்துள்ள அறப் பணிகளைப் பற்றி 2,000 வார்த்தைகளுக்கு மேற்படாமல் எழுதி அனுப்பவும்.

4. கவிதைப் போட்டி.: கணபதி முதல் ஆஞ்சநேயர் வரையுள்ள கடவுள் மேல் 50 வரிக்கு மேற்படாமல் விருத்தம் — வெண்பா— அந்தாதி போன்று எந்த ரூபத்தில் வேண்டுமானாலும் கவிதை எழுதி அனுப்பவும்.

கல்லூரி மாணவர்கள் திருக்குறள் பூராவையும் மனப்பாடம் செய்து கல்லூரி முதல்வரிடமோ தமிழ்ப் பேராசிரியரிடமோ ஒப்புவித்துச் சான்றிதழ் வாங்கி அனுப்பவும். இதேபோல் பகவத்கீதை 18 பாகங்களையும் மனப்பாடம் செய்து மேலே குறிப்பிட்டவர்களிடம் ஒப்புவித்துச் சான்றிதழ் வாங்கி அனுப்பவும்.

மேலே சொன்ன நான்கு போட்டிகளிலும் கலந்துகொள்ளும், உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் சான்றிதழ்—படங்கள் — கட்டுரை - கவிதை இவைகளை ஜூன் 30க்குள் ஸ்ரீமடம் மானேஜர் நெ. 1. சாலைத் தெரு. காஞ்சிபுரம் — 2 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கவும். கலந்துகொள்ளும் ஒவ்வொரு பள்ளி மாணவருக்கும் ஒவ்வொரு சான்றிதழ், ஒவ்வொரு வெள்ளிக் காசு சன்மானம் கொடுக்கப்படும். கல்லூரி மாணவர்களுக்கு ரூ 100 சன்மானம் வழங்கப்படும்.

காஞ்சிபுரம் மானேஜர், ஸ்ரீமடம்

● ஒவ்வொரு பத்திரிகைத் தலைப்பிலும் கதைகள் வந்தது புது விதமாக இருந்தது. அதிலும் 'விகடன்' கதை மனித உணர்ச்சிகளை அப்படியே பிழியக் கூடியதாக இருந்தது.

சென்னை-45 கே.எஸ். கணபதிசுப்பிரமணியம்

● முதல் பக்கத்தில் இடம்பெற்ற 'ஐ-க்யூ' வெயில் காலத்துக்கு ஏற்றது. கண்டு பிடிப்பதற்குள் மண்டையைப் பிய்த்துக் கொண்டு பேசாமல் 5ம் பக்கத்தைப் புரட்டிவிட்டேன். நல்ல தேர்வு ஐயா இது!

உடுமலைப்பேட்டை ஏ. சாகுல் அமீது

● இந்தியா வெட்கப்பட வேண்டிய அளவுக்கு மிக மிகச் சிறப்பாக அகில உலக இந்து மாநாட்டைத் தைரியமாகவும் அமைதியாகவும் நடத்திய இலங்கை அரசை எப்படிப் பாராட்டினாலும், எவ்வளவு முறை பாராட்டினாலும் தகும். நாம் சொல்லளவில் பேசுவதை அவர்கள் செயலளவில் காட்டி விட்டார்கள்.

சென்னை-5 எஸ். வி. ராஜசேகர்

● நுனிக் கரும்பிலிருந்து அடிக்கரும்பு வரை சுவைத்தது போன்ற ருசி; வடை பாயசத்துடன் விருந்து சாப்பிட்டது போன்ற திருப்தி ஒவ்வொரு அத்தியாயம் ''சுவர்கள்'' படித்து முடிக்கும்போதும் ஏற்படுகிறது.

பெரம்பூர் அபிராமிதாசன்

● அரட்டைப் பகுதியில் பாரதி ராஜா முதல்வர் ஆன் போன்றும், பாலச்சந்தர் கலைஞரின் தோஸ்து போலவும் அல்லவா சரடு விட்டிருக்கின்றீர்; இந்த வம்பு உங்களுக்கு ஏன் சார்?

மேலகிருஷ்ணன்புதூர் ஆர். கே. லிங்கேசன்

● திருப்பதி திரு மணி ஸ்தபதி அவர்கள் கடிதம் கண்டேன்.

கதலகர்ணம் அந்நாளில் பிராபல்யம் என்றால், ஏனைய கோயில்களில் ஏன் கதலகர்ணம் தலைகாட்டவில்லை?

நான் ஒரு வெறிகொண்ட தமிழன். ஆயினும் எல்லாமே நாம் என்று சொல்கிற கண்மூடி வெறித்தனம் என்னிடம் இல்லை.

ஒரு வெளிநாட்டு விஞ்ஞானப் பாதிப்பே ராச ராசேச்சரம். வேறு எவர் தொடர்பிலும் அது தெரியவில்லை. சீனத் தொடர்பில் மட்டுமே பாதிப்புக் கண்டிருக்க வேண்டும். தமிழர்கள் கலைஞர்களாய் இருந்திருக்கிறார்கள். விஞ்ஞானிகளாய் இருந்ததில்லை என்பதை நாம் ஒப்புக்கொண்டே தீர வேண்டும்.

சென்னை-93 கோவி. மணிசேகரன்

# டாசெல்

சுகாதார சாதனம்.
சிக்கனத்தின் இருப்பிடம்
அழகின் உறைவிடம்
உழைப்பதில் நிறைகுடம்.



வெடிப்புகள் ஏற்படாத
பளிங்கு போன்ற.
சுகாதார சாதனங்களை
சகாயமான விலைகளில்
டாசெல் இப்பொழுது
பிரத்யேகமாகத் தயாரித்து
அளிக்கிறது.

டாசெல் சுகாதார சாதனங்களால்
உங்கள் பாத்ரூம்
நவீனமாகவும் அழகு
மிகுந்ததாகவும்
இருப்பது நிச்சயம்




**தமிழ்நாடு**
**செராமிக்ஸ் லிட்.,**
**சென்னை-600018**

**TACEL** VITREOUS SANITARYWARE

# சினிமா சினிமா

திரைஞானி




◘ ஏகப்பட்ட விமரிசனங்கள், கிசுகிசுக்கள், மூனு முணுப்புக்கள் இருந்தாலும் வெற்றிகரமாகக் நூற்றைத் தாண்டி விட்டார் விசு!

கல்யாணமாகாத கன்னிப் பெண்களுக்குக் கல்யாணம் செய்து வைப்பதையே தன் வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட நாரதா நாயுடு (விசு). விசித்திரமான எட்டு கண்டிஷன்களுடன் பெண் தேடும் கிட்டாமணி (எஸ். வி. சேகர்). இதில் ஒரு கண்டிஷனில் கூடத் தேறாத உமாவை (சாந்தி கிருஷ்ணா) கிட்டாமணியின் தலையில் கட்டி, அதை வெற்றிகரமான வாழ்க்கையாக்கப் பார்ப்பது தான் கதை.

விசு 'பெருமையுடன் அறிமுகப்படுத்தும் கிஷ்மூ'? சேகரின் அத்தானாக அக்கா மனோரமாவின் தாசானு தாசனாக, மூக்கிற்குக் கீழிறங்கிவிடும் கண்ணாடியுடன் சுற்றிச் சுற்றி வருவது... 'மனைவியின் புடவையை மடிக்காத மனுஷன் மனுஷனே யில்லை' என்று தலையைச் சாய்த்து வெடிப்பது ...எல்லாம் சரிதான்.

தனக்குக் காது கேட்காத காரணத்தால் மற்றவர்கள் பேசுவது எதுவுமே விளங்கவில்லை என்பதைப் பொம்மை போல் முகத்தை வைத்துக் கொண்டு அப்பாவித்தனமாக முழிக்கும் பெண்ணின் அப்பா, இரட்டையரில் மற்றவன் கிறிஸ்துவப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டு போய்விட அப்பாவியாகத் தங்கை கல்யாண விஷயமாக மாட்டிக் கொண்டு படாத பாடுபடும் அண்ணன்....

போதாக் குறைக்கு கிட்டாமணியின் அக்காவாக வரும் மனோரமாவின் வித்தைகளைத் தாராளமாகக் காட்ட அனுமதித்திருக்கிறார் டைரக்டர். நாயனம் தூக்கிக் கொண்டு ஆடும் அம்மாவுக்கு நன்றாகத் தான் டான்ஸ் ஆடுகிறார் பிள்ளை பூபதி.

சிரிக்க வைக்கும் சேகருக்குக் கோபப் படத் தெரியவில்லை. மனைவி தன் எந்தக் கண்டிஷனுக்கும் பொருந்தவில்லை என்று தெரிந்து கொண்டு, ''தையா தக்கா' என்று குதிக்கும்போது மனுஷனுக்கு ஏன் இந்தக் கஷ்டம் என்றுதான் தோன்றுகிறது. காச் மூச்சென்று கத்தினால் எடுபட்டு விடுமா? துணைக்குப் பொம்மையாக சாந்தி கிருஷ்ணா!

விசுவரூபம் எடுத்து நிற்பவர் விசுதான். நாரதா நாயுடுவாக வெளுத்து வாங்கிவிட்டார். எல்லோரையும் பொய்யைச் சொல்ல வைத்து, படாத பாடு பட்டுக் கல்யாணத்தை முடித்து வைக்க, பிரச்னை என்று வந்தவுடன், 'உன்னை யாருய்யா பண்ணச் சொன்னது' என்று ஒவ்வொருவராகக் கதவைச் சாத்திக் கொள்வதும், 'இப்படியாவது ஒரு பெண்ணின் கழுத்தில் மாங்கல்யம் ஏறுமென்றால், அதற்கு நான் வெட்கப்படவுமில்லை, வேதனைப்படவுமில்லை' என்று கொஞ்ச நேரம் தனியாகப் பேசுகிறார். அங்கேதான் இது 'மோடி மஸ்தான்' நாடகத்திலிருந்து வந்தது என்ற நெடி அடிக்கிறது.

மற்றபடி மணல் கயிற்றை நன்றாகவே திரித்திருக்கிறார்.

—மஞ்சுளா ரமேஷ்

◘ எப்படா வெளியே வருவோம் என்றாகி விட்டது. ஆமாம், என்னதான் சொல்ல வருகிறீர்கள்? காதலியைக் கைவிட்டுப் போனால் அவன் பைத்தியமாகத்தான் திரிவான் என்பதையா? மகன் செப்பு விளக்கு ஏரியாவில் லுங்கியை முழங்காலளவு வழித்து விட்டுக் கொண்டு அப்பாவையே பார்த்துக் கண்ணடிப்பாள் என்பதையா? என்ன கதை?

சிவாஜி சார், வெயிட் இல்லாத கதையில் 'வெயிட்'டுடன் நீங்களும், 'வெயிட்' குறைந்த ஸ்ரீப்ரியாவும் ... ஏன் சார் இப்படி நேரத்தை வீணடிக்கிறீர்கள்?

கொஞ்சத்துக்குக் கொஞ்சம் பொறுமையைப் போதிப்பது குளுமையான காமிரா தான். கோலாலம்பூரின் பச்சையும், செழுமையும்....புகுந்து விளையாடி இருக்கிறார்கள். இப்போதெல்லாம் காமிராதான் முக்கால் வாசிப் படங்களின் உயிர்நாடியாக இருக்கிறது. பின்னணி இசையில் நாட்டுக்குத் தகுந்தாற்போல் மாற எம். எஸ். விஸ்வநாதனை மிஞ்ச யாருமில்லை.

ரெட்லைட்' விடுதியின் வித்தியாசமான தலைவியாக வரும் மனோரமாதான் கொஞ்சம் நெகிழ வைக்கிறார். மற்றபடி....ம்....ஒன்றும் சொல்லும்படியாக இல்லை.

-மஞ்சுளா ரமேஷ்



## பூந்தொடி

◘ ஒட்டுக் குடித்தனம் உள்ள ஒரு காலனியில் தனது 'புனித மலர்' படப் பிடிப்பைத் தீவிரமாக நடத்திக் கொண்டிருந்தார் டைரக்டர் துரை.

அன்றைய காட்சியில் பிராந்தி குடித்துக் கொண்டிருக்கும் பாஸ்கரை மனைவி நித்யா கண்டித்தபோது பூசல் ஏற்பட, மத்யஸ்தத்திற்குப் பக்கத்துப் போர்ஷன் பூர்ணிமா ஜெயராமை அழைத்து வருகிறார். அவர் வந்த பிறகு கணவன் பெட்டிப் பாம்பாக மாறி, ''இனி பிராந்தி விற்கும் கடைப் பக்கமே போக மாட்டேன்'' என உறுதி கூறுகிறார்.

''ஐய்யய்யோ! அப்படியானால் நீங்கள் வெளியிலேயே தலை காட்ட முடியாது'' என்கிறார் பூர்ணிமா.

''ஏன்?'' என்று கேட்க, ''எல்லாத் தெருக்களிலும் அந்தக் கடை வந்துவிட்டதே'' என்று ஜோக் அடிக்கிறார்!

சிந்திக்கவைக்கும் வசனம்.



## அகர வரிசைப் பேட்டி

(அ)

அகர வரிசைப்படி சில நட்சத்திரங்களிடம் சில வார்த்தைகளை நினைவுபடுத்த அவற்றைத் தங்களது திரை உலக, சொந்த வாழ்க்கையோடு உரச வைக்கிறார்கள் இங்கே.

'உச்ச கட்டம்' சுனிதா 'அ' வரிசைப் பேட்டியைத் தொடங்கி வைத்துள்ளார்.

● அதிர்ஷ்டம்: பூனா இன்ஸ்டிட்யூட்டில் நடிப்புப் பயிற்சி பயின்று முடித்ததும் முதன் முதலாக 'சத்யஜித் ரே'யின் படத்தில் நடிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததைப் பெரிய அதிர்ஷ்டம் என்றே கருதுகிறேன் நான். படத்தின் பெயர் ஜன அரண்யா. முதல் படத்திலேயே பிரதிப் முகர்ஜியுடன் கதாநாயகியாக நடித்த அதிர்ஷ்டமும் எனக்கு உண்டு. அப்பொழுது என் பெயர் சுதேஷ்ணா.

அதன் பிறகு தெலுங்கு, மலையாளம் கன்னடம், தமிழ் மொத்தம் ஐந்து மொழிப்படங்களிலும் நடித்தாகி விட்டது. என்றாலும் புகழ் விஷயத்தில் அந்த அதிர்ஷ்டம் என்னை மிகவும் நெருங்கவில்லை என்றே கருதுகிறேன். அதிர்ஷ்ட தேவதை என் வீட்டுக் கதவைப் பலமாகத் தட்டும்போது கெட்டியாகப் பிடித்துக் கொள்ள நினைத்திருக்கிறேன்.

நான் நடித்துள்ள 'பாசப் பிணைப்பு' படம் வெளி வந்த பிறகு அத்தகைய அதிர்ஷ்டம் என்னை வந்து அடையும் என்று நம்புகிறேன்.

● அடல்ட்ஸ் ஒன்லி: நான் நடித்த முதல் தமிழ்ப் படமான 'உச்ச கட்டம்' அடல்ட்ஸ் ஒன்லி' படம்தான். அதைப் பற்றிச் சொல்வதை விட நான் பார்த்த அடல்ட்ஸ் ஒன்லி படத்தைப் பற்றிச் சொல்வது பொருத்தமாக இருக்கும் என நினைக்கிறேன்.

ஹெரால்ட் ராபின்ஸ் எழுதிய 'த அட்வென்சர்' புத்தகத்தை 'த்ரில்'லோடு படித்து முடித்தேன். அதில் வரும் ஹீரோ கறுப்பு மனிதன். பராக்ரமசாலி. அதே மனிதனை அக்கதை படமாக வெளிவந்தபொழுது திரையில் போய்ப் பார்க்கும் ஆவலில் போய்ப் பார்த்தேன். பெருத்த ஏமாற்றம். ''நாவலில் படித்த அந்த நாயகனா இவர்?'' என்று கேட்கத் தோன்றியது.

● அழகி: சினிமா உலகம் புதிய நாயகிகளைத் தேடும் போது பயன் படுத்தப்படும் வார்த்தை இது. ஒரு படத்தில் அறிமுகமான பிறகு அதே அழகி வேறு புதிய அழகியால் மறக்கடிக்கப்படுகிறாள்.

என்னைக் கேட்டால் என் அம்மா மீனாதான் அழகி என்பேன். ஸ்வீட் மம்மி. என் வயதில் என் அம்மா இன்னமும் எவ்வளவு அழகாக இருந்திருப்பாள் என நினைத்துப் பார்ப்பது உண்டு. சினிமா உலகில் நான் அழகி என்று நினைக்கிறது தமிழிலே சரோஜாதேவி; வங்காளத்திலே ஷர்மிளா டாகூர், இந்தியிலே மீனா குமாரி. (யாருக்கும் கோபம் வராத மாதிரி சொல்லிவிட்டார்)

● அமெரிக்கா: நான் இன்னமும் அங்கே போனதில்லை. போகணும்னு ஓர் ஆசை இருக்கிறது. காசு செலவழித்துப் போவதா அல்லது ஷூட்டிங் சான்ஸ் ஏதாவது வருமா? என் அதிருஷ்டத்தைப் பொருத்திருக்கிறது.

● அல்சேஷன்: இந்த ஜாதி நாய் என்றால் எனக்கு அறவே பிடிக்காது. நான் 'பொமரேனியன்' தான் வளர்க்கிறேன். பெயர் மனு.

● அசைவம்: விரும்பிச் சாப்பிடுவேன். அதில் எது ரொம்பப் பிடிக்கும் என்று கேட்காதீர்கள். எல்லாம் பிடிக்கும். வெஜிடேரியனில் அப்பளம் பிடிக்கும்.

● அறிவு: என்னைவிட என் சிஸ்டர் சந்திராவுக்கு அதிகம். வெரி க்ளவர் கேர்ல். வங்காளத்தில் இருக்காங்க.

● அவார்ட்: அரவிந்தன் டைரக்ட் செய்த 'அபர்ணா' படத்திலே நடிச்சேன். இது அவார்ட் வாங்கிய படம்.

● அச்சம்: நல்ல கதாபாத்திரங்கள் கிடைத்தால் அற்புதமாக நடித்துக் காட்ட முடியும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. 'பாசப் பிணைப்பு' படத்திலே அப்படிப்பட்ட கிராமப் பெண் வேடத்தில் நடித்துள்ளேன். படத்தைப் பார்த்தால் நீங்களே அசந்து போவீர்கள். அப்படிப்பட்ட சிறந்த கதாபாத்திரங்கள் எனக்குக் கிடைக்காமல் போய் விடுமோ என்கிற அச்சம் உள்ளூற எனக்கு உண்டு.



## கனவுகள் கற்பனைகள்

□ மிஞ்சும் பிஞ்சுகளின் கனவு கற்பனைகளைப் படம் பிடித்துக் காட்டியிருக்கிறார்கள். ஒரே பள்ளியில் படிக்கும் இரண்டு பிஞ்சுகள் (ஒரு ஆண் ஒரு பெண்) தங்களை விட இரு மடங்கு வயதுள்ளவர்கள் மீது உள்ளங்களைப் படர விடுகிறார்கள்.

ஒரு 'பிஞ்சு' மோட்டார் சைக்கிளில் வலம் வரும் சரத் பாபுவைப்' பிடித்துக் கொள்கிறது. இன்னொரு 'பிஞ்சு' ஆவின் பால் வாங்க வரும் ரூபாவைப் பார்த்துப் பல்லை இளிக்கிறது.

இருவரது மனப் பிரமைகளும் பலூன் மாதிரி வெடிக்கும்போது தோல்வியைத் தாங்க முடியாமல் மாணவன் தற்கொலை செய்து கொள்கிறான். மாணவி தான் விரும்பியவளை மாடியிலிருந்து கீழே தள்ளித் தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்கிறாள்.

ராபர்ட் ராஜசேகரின் கதைக் கரு 'ஆழமானதாக' இருக்கலாம். அவசியமானதா?

துணிக் கடை பொம்மை மாதிரி கவுன் அணிந்து தோற்றமளிக்கும் ராணி பத்மினி நடிப்பில் வாக்கி டாக்கி.

சரத் பாபு நன்றாக மோட்டார் சைக்கிள் ஓட்டுகிறார்.

புது முகம் மதனின் நடிப்பு சில இடங்களில் நேர்த்தி.

ரூபா: யதார்த்தமான முகமும் நடிப்பும் ரசிக்கத் தக்கவை.

கனவும் கற்பனையும் கலந்து போகக் கூடியவை — இந்தப் படமும் கூடத்தான்!



தாளிப்பு: சுகு

# சொல்லாத கமெண்டுகள்



### பத்திரிகைகளைப் பற்றி சுகாசினி :

இந்தத் தமிழ்ப் பத்திரிகைகளுக்குத் தலை காலே புரியவில்லை. ஒரு நடிகையை இப்படியா போட்டி போட்டுக் கொண்டு விளம்பரப் படுத்துவது? அட்டையில் போடுவது? விவஸ்தையே கிடையாது... இத்தனைக்கும் அந்த ஜீஜீயின் ஒரு படம்கூட ரிலீஸாகலே!

### படத் தலைப்புக்கள் பற்றி பாரதிராஜா :



ஒரு பாரதிராஜா என்ற பெயர் சக்ஸஸ்ஃபுல் லாகிவிட்டதால் எல்லா ராஜாவும் வெற்றிபெறும் என்று சிலர் நம்பிக் கொண்டிருக்கிறார்கள். (இளையராஜா இதற்கு விதி விலக்கு) பாருங்களேன். ஆட்டோ ராஜா, தனிக்காட்டு ராஜா, இந்த ராஜா அந்த ராஜா என்று எத்தனை! அனுதாபத்துக்கு உரிய ராஜாக்கள்.



### சிலேடை பற்றிக் குமரி அனந்தன் :

இதென்ன' சிலேடைப் பேச்சு கி. வா. ஜ. வுக்கும் வாரியாருக்கும் மட்டும் காபிரைட்டா? நான் பேசினால் தமாஷ் பண்ணுகிறார்கள். இதில் என்ன தோஷம்? தோஷம் வேண்டாம்; சந்தோஷம் வேண்டும். ஜலதோஷம் வந்தவர்களைப் போல் முணு முணுக்கிறார்களே. வாதம் செய்ய வாருங்கள். பிடிவாதமாக விதண்டா வாதம் செய்பவர்கள் வீணான அபவாதத்துக்கு ஆளாவார்கள்.

### மேனகா பற்றி வினோபா :



மேனகா நல்ல பெண். மற்றவர்களுக்குத் தொல்லையோ சங்கடமோ தர விரும்பாத குழந்தை. முக்கியமாக என்னைப் போன்ற வயதானவர்களுக்கு! அவள் என்னைச் சந்தித்து ஆசீர்வாதம் பெற வந்தால் சமர்த்து; வராமலே இருந்து விட்டால் ரொம்ப ரொம்பச் சமர்த்து!



### வாணி பற்றி லதா மங்கேஷ்கர்:

ஒரு சமயம் வாணியின் புரோகிராமுக்குப் போயிருந்தேன். மிகவும் பிரமாதமாக இருந்தது. எவ்வளவு பெரிய கலைஞர் என்று மெய்மறந்தேன். அது ஒரு மறக்க முடியாத கலைவிருந்து. என் பாராட்டுக்கு உரியவர் வாணிகமல்.... என்ன கேட்கிறீர்கள்? வாணிஜெயராமின் இசை நிகழ்ச்சியைப் பற்றியா? அப்படி ஒருவர் இருக்கிறாரா? எனக்குத் தெரியாதே!

### ராமராவ் கட்சி பற்றி அஞ்சையா :



அந்துலே மாதிரி நானும் டிரஸ்ட் ஏற்படுத்திப் பணம் திரட்டி வைத்திருந்தால் இவ்வளவு சுலபத்தில் முதல் மந்திரி பதவியை இழந்திருக்க மாட்டேன். அதுதான் போகட்டும். இந்த ராமராவ் கூட என்னை அலட்சியம் செய்யக் காரணம் என்ன? பணம் இருந்தால் என்னை ஒரு தலைவராக அவர் ஆக்கி யிருக்க மாட்டாரா? இந்த அழகில் 'ஏழைகளின் கட்சி' என்று பறைசாற்றிக் கொள்கிறார்! என்னைவிடப் பெரிய ஏழை யார்?

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)

Assistant Editor: P.S. Mani    Layout Artist: Nambi    Editor: K. Rajendran

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




**காம்ப்ளான்® ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றும் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-களுக்கென்றே சிறப்பான சில தேவைகள் உள்ளன—வளரும் வயதிலே உடம்புக்குத் தேவைப்படும் மிகச் சிறந்த புரதம், 22 மூலாதார ஊட்டச் சத்துக்கள் —அளிக்கிறது காம்ப்ளான். மறவாதீர்கள். டாக்டர்களின் சிபாரிசு பெற்ற, திட்டமிட்ட உணவு காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

